# திருவள்ளுவநாயனார்

அருளிச்செய்த

# குறள் மூலமும்

சுகாத்தியர் இயற்றிய



## கருத்துரையட்டவணையும் பொழிப்புரையும்

இதிலச்சிடலாயிற்று.

PRINTED AT THE LAWRENCE ASYLUM PRESS, MOUNT ROAD,

தெய்வப்புலவத் திருவள்ளுவநாயனார் உலகமெல்லாம் வாழ்வடய்ந்துய்யும்பொருட்டுச் செய்தருளிய இந்நூலிற்குப் பாயிரம் நான்குமுகமாகத் தந்தனர். அவற்றுள், முதலா முகத்தில் முதற்பொருள் வாழ்த்துணர யானென லறுதலா லாணவமல நீக்கமும் இரண்டா முகத்தில் மழய்த்துணய் வாழ்த்துணர எனதென லறுதியால் மாயாமல நீக்கமும் மூன்றுமுகத்தில் துறவரன் வாழ்த்துணர விருப்ப மறுதலாற் காமியமல நீக்கமும் பொதுவாற்கூறிச் சிறப்பாகிய நான்காம் முகத்தில் அறமூறும் வாழ்த்துணர இயல் இயய் இறய்வனும் முயல்வுறயின் முயல்பவர் மும்மலமு மறுதலால் தத்துநிலயில் வழுவா தொழுகும் அறத்தினாக்கமுங் கூறினர்.

இந்நூலிற்குரயாசிரியராய பதின்மர்களுள் பிந்தினோர் சிலர் அறப்பால் பொருட்பால் இன்பப்பால் என முப்பாலாக வகுத்து முறயே அறத்திற்கு முப்பத்து நான்கு பதிகங்களும் பொருட்கு எழுபது பதிகங்களுந் தந்து இன்பத்திற்கு இல்வாழ்க்க புணர்த்தும் இருபத்தய்ந்து பதிகங்களய் இடம்பிறழ்க்கடயில்வய்த்து இந்நூன் முழுமயுமற நூலாகவேயிருக்க அதனுட் சிலபதிகங்களய் மட்டு மறத்திற்குரியதென்ற குற்றமும் அறத்திற்குப் புறம்பாயபொருளய் அநேக பதிகங்களாலும் இன்பத்தய்ச் சில பதிகங்களாலுங் கூறியகுற்றமும் அறம்பொருளின்பங்களிற் சிறந்த வீடு என்பதயொருபாலாற் கூறுதகுற்றமும் நூலாசிரியர்க் கேற்றினர் அது எவ்வாற்றாலும் எவர்க்கும் பொருத்தமின்மயாலும் அறம்பொருளோடு இன்பமும் நூற்பயனே யன்றி நூலினுறுப்பாகுதலின்மயாலும் காமப்பாலெனவய்த்த இருபத்தய்ந்து பதிகங்களுக்குங் காம நோக்கமாகப்பொருள் செய்தோரூ மிதற்கு வேறுமொரு பொருளுளதெனக் கூறியிருத்தலாலும் அவய் இயன்முற

## உரயாசரியர் கோட்பாடு.

யறத்திற்கேற்பப்பொருடந்து நிற்றலாலும் அவ்வியன்முற யின் கடயிலமய்க்கலாயின.

பிந்தினவுரயாசிரியரவ்வாறு பால்வழுவச்செய்ததுமன்றி அவற்றிற்கிணங்க உறுப்புக்களயும் வரயின்றிவகுத்துப்பொருள் வழுவப்பதிகப் பெயரிட்டனர் ஆதலால் நூலின்பொருட்டொடர்பு தெளிந்துமுறயொன்றிற்காண்மய் மூன்றும் ஆண்மயொன்றிற்கியன் மூன்றும் இயல் ஒன்றிற்குடய்மய் மூன்றும் ஆண்மய்கடோறும் பயனொன்றுமாகப் பதிகங்களயமயவகுத்து அவ்வப்பதிகங்களிற் கண்ட பதத்தாற்பொருட்கிணங்கப் பெயரிட்டனம்.

இந்நூல் மாந்தர் தத்தமக்குரிய நிலய்மய் தவறுதுய்ய வேண்டு முறயயுணர்த்தலால் இயன்முறய் இயய்முறய்
இறய்முறய் என முப்பாலாகவகுத்து அவற்றுள் இயன்முறயிற்றலய்வனது சிறபுத்தன்மயயும் தலய்வியது சிறப்புத்தன்மயயும் அவ்விருவரது பொதுத்தன்மயயும் இயய்

முறயில் முதல்வனது சிறப்புத்தன்மயயும் வினயரது சிற புத்தன்மயயும் அவ்விருவரது பொதுத்தன்மயயும் இறய் முறயில் அரசனது சிறப்புத்தன்மயயும் குடிகளது சிறப் புத்தன்மயயும் அவ்விருவரது பொதுத்தன்மயயுந் தெற் றெனவிளக்கினர்.

நூற்சிறப்புப்பாயிரப்பதிகத்தில் முதலிரண்டு குறளும் கடயிரண்டுகுறளும் மும்முறயறத்தின் பொதுத்தன்மயயும் இடயினின்ற ஆறுகுறளும் முறயே இயன்முறயிரண்டும் இயய்முறயிரண்டும் இறய்முறயிரண்டுமாக நோக்கிநிற் கும் இவ்வாறே முறய்ப்பாற்பதிகங்கள் ஆண்மய்ப்பதிகப் பொருளயும் ஆண்மய்ப்பதிகங்கள் இயற்பதிகப்பொருள யும் இயற்பதிகங்கள் உடய்மய்ப் பதிகப்பொருளயும் புற னடயாண்மய்ப்பயன் பதிகங்கள் இயற்பதிகப்பொருட்ப யன்களயும் நோக்கி நிற்கும்.

திருவள்ளுவர் தெய்வப்புலவ ராதலாலும் அவர் தம் மயேற்றுக்கொள்ளாத சங்கத்தி லரங்கேற்றி யிருத்தலா லும் இந்நூலய்த் தமிழ்வேதமென முன்னயோரேற்றி ருத்தலாலும் அவரருளிய திருக்குறள்களில் எவ்வித வழுவும் இராவென்னும் நிச்சயத்தாலும் எதுகய்மோனய்



## உரயாசரியர் கோட்பாடு.

வழுவாதிருந்த அநேகங் குறள்களுக்கு மொப்பமற்றய குறள்களுக்கு எதுகய்மோனய்த்திருத்தி சுத்த மூலங்கண்டு வெளியிடப்பட்டது.

இவ்வாறு ஆதியில்வழங்கிய மூலத்தய்க் கண்டெடுத்ததில் அவ்வழுக்களனய்த்தும் ஒவ்வொருகுறளின் முதற்சீரின்கண்ணே வந்தனவென்பதும் ஏதுகய் வழுக்கள் பெரும்பாலும் முதலடி முதற்சீரின் கணிருந்தனவென்பதும் மோனய்வழுக்கள் பெரும்பாலும் முதற்சீரின் முன்வந்த ஓரெழுத்து மாறலாலுண்டாயின வென்பதும் எதுகயும் மோனயும் வழுவிய குறள்களிற் பெரும்பாலும் முதலடி முதற் சீரில்வந்தசொல் இரண்டாமடி முதற் சீரில்வர இரண்டாமடி முதற் சீரில் எதுகயமோனய்கட்கமயாத சொற்றோனறிவழுக்களுண்டாயின வென்பதுங் காணலாயின யாவர்க்கு மிந்நூலாற் கூறப்படும் அறப்பொருள் தெள்ளிதாய் விளங்கச்செய்த இப்பொழிப்புரய் மூலத்தின் சொல்வய்ப்புமுறயய் எவ்விடத்துமாற்றாமலே பொருட்டொடர்வழுவாதுசெம்முறயாக எழுதப்பெற்றுளது.

வடமொழி எழுத்தாகிய ஐ. ஔ. எனப்படுமெழுத்துக்கள் தமிழிற் காரணமின்றிச் சேர்த்துளவாதலாலும் அவற்றுள் (ஔ) இந்நூலு ளெவ்விடத்தும் வரப்பெறாமயாலும்(ஐ)க்கு வடமொழிக்குரிய வரிவடிவயொழித்துத் தமிழ் முறய்மய்க்கிணங்க அகரயகரவரிவடிவாகவும் ககரவோசயய்த்தழுவி முப்புள்ளி வடிவினதாய் வழங்கிய ஆய்தவெழுத்துத்தமிழோசய்க்கு வேண்டுவதின்மயா லதற்குரித்தான ககரவரிவடிவாகவும் வரய்தலாயின.

திருவள்ளுவ நாயனரிந்நூலிலருளிய பயன்ய் உலகிலுள்ளாரெல்லாம் அடைய்ந்துய்யுமாறு பதிகங்களய் முறய்ப்படுத்தி அவற்றின்கருத்து விளங்கும்படியிட்ட பெயர்ப்பொருளதிகாரவுரயிற்றுலக்கி எதுகய்மோனய் வழுக்களய்க்களய்ந்து ஒவ்வொரு திருக்குறளின் சிறந்த பொருளயுந் தோன்றத்தந்து செந்தமிழ் ஆதிமுறைப்படி வரய்ந்தச்சிற்பதிப்பித்தனம்.

மதுரப் ——— } இங்ஙனம்
கி. ஆ. 1889 ௵. } சுகாத்தியர்.



## பதிகக்கருத்துரயட்டவணய்.

## முதலாவது இயன்முறய்ப்பால் . ..

## பதிகக்கருத்துரயட்டவணய்.

பதிகக்கருத்துரயட்டவண்ய்.

## ii. காண்பியல்

1. பெருக்குடய்மய்
2. தமருடய்மய்
3. இனமுடய்மய்

iii. தேர்வியல்

1. வலியுடய்மய்
2. பொழுதுடய்மய்
3. இடமுடய்மய்

ஊழாண்மய்ப்பயன்

3. நாடாண்மய் வகய்

i. கோளியல்

1. புகழுடய்மய்
2. தழுவுடய்மய்
3. ஒளியுடய்மய்

ii. வேந்தியல்

1. நயப்புடய்மய்
2. நிகழ்வுடய்மய்
3. உயர்வுடய்மய்

பதிகக்கருத்துரயட்டவணய்

முதற்பொருள்வாழ்த்து. (1)

அகரமுதல வெழுத்தெல்லா மாதி

முகரமுதற்றே யுலகு. ... ...

... 1.

மற்றதனலாய பயனென்கொல்வாலறிவ

னெற்றுடொழா அரொனின். ...
... 2.

மலர்மிசயேகினன் மாணடிசேர்ந்தார்

நிலமிசய் நீடுவாழ்வார். ... ...

... 3.
வேண்டுதல்வேண்டாம யிலானடி
சேர்ந்தார்க்
கியாண்டுமிடும் பயில. ... ...
... 4.

இருள்சேரிருவினயுஞ் சேராவிறய்வன்

பொருள்சேர் புகழ்புரிந்தார்மாட்டு.

... 5.
பொறிவாயிலய்ந்தவித்தான்
பொய்தீரொழுக்க
நெறிநின்ருர் நீடுவாழ்வார். ...

... 6.

தனக்குவமயில்லாதான் றாள்
சேர்ந்தார்க்கல்லான்
மனக்கவலய் மாற்றலரிது. ... ...

... 7.

அறவாழியந்தணன் றாள்சேர்ந்தார்க்கல்லால்
நிறவாழி நீந்தலரிது. ... ... ... 8.

கோளில்பொறியிற்குணமிலவேயெண்குணத்தான்
றாளய்வணங்காத் தலய். ... ... ... 9.

பிறவிப்பெருங்கடனீந்துவர் நீந்தா
ரறவனடி சேராதார். ... ... ... 10.

[10]

உலகிற்கு முதலாகிய பதிவாழ்த்து. (1)

அகர ஓசயய் முதலாகவுடயன (உலகிலுள்ள) எழுத்தெல்லாம் (அதுபோற் கடவுள் ஆகெனக்கூறிய) ஆதி ஓசயய் முதலாக வுடயது(யாவர்க்குமிடமாய)உலகம். 1.

மற்றயதனுலுண்டாகிய பயன் யாதென்றெழிக தூய அறிவுருவான கடவுளது ஒள்ளிய பாதங்களய் (உலகினர் யானெனும் கந்தயாற்) றெழாரொன்னுமிடத்து. ... 2.

மலர்ந்த நெஞ்சத்தி லுலாவினாகிய கடவுளது மாண்பாய பாதங்களய் (யானெனலற்று) அடய்ந்தவரோ உலகின்மேலாகிய உலகின்கண் நெடுங்காலம் வாழ்வார். 3.

(உலகினரது) வேண்டுதலய் வேண்டாமயென்னுங் குறயில்லாராகிய கடவுளது திருவடிகளயடய்ந்தவர்க்கு எக்காலத்தும் (அகந்தயால்வரும்) துன்பமில்லனவாம். 4.

(யானென்னு) மிருள்சேருமனத்தின்கண் (கூறலுஞ்செயலுமாய விருவினய்களு மடயாவாம் கடவுளுக்கு (நாம்) பொருளெனச்சேருங் கீர்த்தியப் விரும்பினரிடத்து. 5.

(அடியாரது) புலப்பொறி வழியிடத்தவாய் அவ்வகயவாக் களயும் ஒழித்த கடவுளது (யானெனும்) பொய்மயில்லாத வழியில் நின்றவரோ நெடுங்காலம் வாழ்வார். 6.

தமக்கு உவமயில்லாத கடவுளது பாதங்களயடய்ந்தவர்க்கே யல்லாமற் (பிறர்க்கு) மனத்தின்கணுண்டாகும் (யானெனுந்) துன்பத்தய் நீக்குதலரிதாம். ... 7.

ஒழிவாகிய கடல்சூழ்ந்த அழகிய தண்மயுடய கடவுளது பாதங்களய்ச் சேர்ந்தவர்க்கல்லாமற் (பிறர்க்கு யான் என்னுங்) குற்றத்து வாழுந் தன்மயினின்று நீந்த லரிதாம், 8.

(தத்தம்)கொள்கயில்லாதபுலனிடத்தய்ப்போல குணங்களில்லனவாம் (யாவரும்) எண்ணுங் குணமுடய கடவுளது பாதங்களய் (அகத்தாற்)பணியாத்தலயின்கண். 9.

பிறவித்(துன்பமாகிய)பெரிய கடலய் நீந்துவார் (சேர்ந்தவர்) நீந்தமாட்டார் (அகந்தயய்) ஒழித்தற்றன்மயுடய கடவுளது பாதங்களய்ச் சேராதவர். ... ... 10.

[11]

துணய்ப்பொருள் வாழ்த்து. (2)

வானின்றுலகம் வழங்கிவருதலால்
யானெனதிலென்றுணரற் பாற்று. ...
... 1.

துப்பார்க்குத்துப்பாய
துப்பாக்கித்துப்பார்க்குத்
துப்பாயதூஉ மழய். ... ...
... 2.

விண்ணின்றுபொய் ப்பின்

விரிநீர்வியனுலகத்

துண்ணின் றுடற்றும் பசி. ... ...

... 3.

ஊரிஞ்ழா அ ருழவர்புயலென் னும்
வாரிவளங்குன் றிக் கால். ... ...
... 4.

கெடுப்ப தூஉங்கெட்டார்க்கு ச்

சார்வாய்மற்ருங்கே
யெடுப்ப தூஉ மெல்லாமழய். ... ...
... 5.
மிசயின் றுளிவீழி னல்லான்மற்ருங்கே

யசயுந்தலய் காண்பரிது. ... ...

... 6.

தானியலுந்தன்னீர்மய் குன்றுந்தடிந்தெழிலி
மேனல்கா தாகிவிடின். ... ... ... 7.

சிறப்பொடுபூசனய் செல்லாதுவானம்
வறக்குமேல்வானோர்க்கு மீண்டு. ... ... 8.

தானந்தவமிரண்டுந் தங்காவியனுலகம்
வானம்வழங்கா தெனின். ... ... ... 9.

ஆனின்றமயா தலகெனின்யார்யார்க்கு
மூனின்றமயா தொழுக்கு. ... ... ... 10.

[12]

உலகிற்குத்துணயாகிய மழய்வாழ்த்து. (2)

(கடவுட்டானமாகிய) வானுலகத்தில் நின்றே மண்ணுலகம் வழங்கிவருவதால் (மாந்தர்) யானெனலோடு எனதெனலு மில்லயென்றுணரும் பாலதாம். ... 1.

(மனத்) தூயராயினோர்க்குப் (பொருட்) டேய்மயாகிய தூய்மயயுண்டாக்கி அவ்விருதிறத்தூயர்க்கும் துணயாய் நிற்பதும் அவ்வானருள் மழயாம். ... ... 2.

வானருள்நின்று பொய்க்குமிடத்து விரிந்த நீர்மயாற் பெருமயுற்ற உயர்ந்தோருள்ளத்தும் (எனதெனலற)நிலய் பெற்று வருத்தஞ்செய்யும் பசி நோயானது. ... 3.

(எமதெனு) முரிமயிடத்து நின்று நிகழ்வுபெருச் நிகழ் பவரும் (அவ்வான்) புயலென்கின்றவருவாய் வண்மயி னின்றுங் குறய்ந்த காலத்து. ... ... ... 4.

(பெய்யாமயால் எனதெனுமாயயய்க்) கெடுப்பதும் (அ வ்வாறு) கெட்டவர்க்குத் துணயாய் மற்றுமவ்விடத்தே நின்றுயர்த்துவதுமாய எல்லாம் வல்லது மழயேயாம். 5.

வானிடத்தினின்றும் (அருட்) டுளியானது வீழு மிடத்தல்லது வேறாகிய அவ்விடங்களில் (எனதெனல்) அசய்வுபடுமிடங்களய்க் காண்பதரிதாம். ... 6.

(எனதெனல்) தானக இயங்குகின்ற தனது குணங் குறய்ந்துபோம் ஒளிசெய்து விளங்குந் தன்மயுடய வா னருள் வழங்காததாகி விடுமிடத்து. ... .. 7.

(எனதென நிகழுஞ்) சிறப்போடு (உலகவர் கூடிச் செய்யும்) ஆராதனயானது நடய்பெருது வானருள் வறழ்வுபடுமாறல் வானவருக்கு மிவ்வுலகின் கண். 8.

(எனதென்று) கொடுத்தலும் தபித்தலு மாகிய (வினய்) இரண்டும் நிலய் பெருவாம் பெருமயுள்ள உயர்ந்தோர் கண்ணும் வானருள் வழங்கா தென்னுமிடத்து. ... 9.

(எனதெனுமாயப்) அசய்வின்றி அமய்வுபெருது உலக மென்னுமிடத்து யாவர்யாவர்க்கும் (தத்தம்) உறுதியின்றி அமய்வுபெருது ஒழுக்கமானது. ... ... 10.

வேண்டுதனீத்தார்பெருமய் விழுப்பத்துத்
தூண்டும் பனுவற்றுணிவு. ... ...
... 1.

துறந்தார்பெருமய் துணய்க்கூறின்வய்யத்
திறந்தார யெண்ணிக்கொண்டற்று.
... 2.

இருமய் வகய்தெரிந்தீண்டறம்
பூண்டார்
பெருமய் பிறங்கிற்றுலகு. ... ...

... 3.

உரனென்னுந் தோட்டியானோ
ரய்ந்துங்காப்பான்
வரனென்னும் வய்ப்புக்கோர்வித்து.
... 4.

அய்ந்தவித்தாணற்

றலகல்விசும்புளார்கோமான்
கய்ந்தெறுதல் சாலுஙகரி. ... ...

... 5.

செயற்கரிய செய்வார்பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலாதார். ... ... ... 6.

நவயொளியூறேசய் நாற்றமென்றய்ந்தின்
கவய்தெரிவான் கட்டேயுலகு. ... ... 7.

நிறய்மொழிமாந்தர் பெருமய் நிலத்து
வெறுமொழிகாட்டி விடும். ... ... ... 8.

குணமென்னுங் குன்றேறிநின்றார் வெகுளி
கணமேயுஙகாத்த லரிது. ... ... ... 9.

அந்தணரென் போரறவோர்மற்றெவ்வுயிர்க்கும்
பொந்தண்மய் பூண்டொழுகலான். ... 10.

## துறவிற்குரிய அறிவின்வாழ்த்து. (3)

(உலகப் பொருள்களய்) விரும்புதலய்த் துறந்தவரது (அறிவின்) பெருமயய் உயர்வுகள் பலவற்றுள்ளு முயர்த் திக்கூறும் நூல்களது துணிவு. ... ... 1.

(காமியம்) நீக்கிச் சென்றவரது பெருமய்த் துணயய்ச் சொல்லுமிடத்துத் (தம்) வய்ப்பிடத்து (விரும்புதலய்) ஒளித்துடயாரய் எண்ணிக்கொள்ளுந் தன்மய்த்தாம். 2.

நன்மய்தீமயாகிய இருவகய்களயுந் தெரிந்து (அவற் றுட்டீமய்துறந்து) இவ்வுலகறத்தய்ப் பூண்டவரது (அறி வின்) பெருமயே விளக்கமுற்றது உலகின்கண். ... 3.

அறிவென்னு மங்குசத்தாலுய் ஒரும் (புலங்களாகிய யானய்) அய்ந்தயுந்தடுத்துத் (தன்னய்க்) காப்பவன் மே லென்னும் வய்ப்பிடத்துக்கு ஒரு வித்தாவான். ... 4.

அய்ந்தாசய்களயு மொழித்தவன் றனதாற்றலால் விரி ந்த விண்ணுலகத்துளாருங் கோமானுதற் (குலகின்கண்) தீமய்களய்த்துறத்தலே போதுமானசாட்சியாம். ... 5.

(பிறராற்) செய்தற்கரிய புலனடக்கல் செய்வார் (துற வறிவுற்ற) பெரியோர் (அல்லாத) சிறியோர் அச்செய்தற் கரிய வடககத்தய்ச் செய்தற்கல்லாதவ ராவார். ... 6.

நாவாலுணரப்படுஞ் சுவயும் ஒளியும் ஊறும் ஓசயும் நாற்றமுமென்று கூறும் அய்ந்திடத்த் விகற்பங்களயுந் தெரியுந் துறவறிவுடயானிடத்தேயா முலகம். ... 7.

(வேறு படாமயாகிய) சுற்புமொழியுடய துறவோரது (அறிவின்) பெருமயய் நில்வுலகின்கண் (அவ்வறிவில்லா) வெறுமொழிகளே காட்டிவிடும். ... ... 8.

(துறவறிவான) குணமென்னுங் குன்றத்திலேறி நில ய்பெற்ற துறவோர் வெகுளிகோட்லய்க் கணப்பொழு தேனுந் (தம்முட்) காத்தலரிதாம். ... ... 9.

அழகிய தண்மயுடயோரெனப் பெறுவோர் (விரும் புதலய்த்துறந்த)அறவோரேயாம் வேறெந்தவுயிர்கட்கும் பொருந்துஞ் சாந்தத்தன் மய்பூண்டு நடத்தலால்... 10.

[15]

அறமுறய் வாழ்த்து. (4)

**ஆக்கமுஞ் செல்வமு மீனுமறத்தினூ உங் கூக்கமெவ னோவுயிர்க்கு. ... ... ...**

**1.**

**அறத்தினூ உங்காக்கமு மில்லயதனய் ஒறுத்தலினூங்கில்லய் கேடு. ...**

**... 2.**

ஒல்லும்வகயா லறவினயோவாதே
செல்லும்வாயெல்லாஞ் செயல். ... ... 3.

ஆகுளமாசிலஞ தலனய்த்தறன்
பேகுல நீர பிற. ... ... ...
... 4.

அழுக்காறவாவெகுளியின் ஞச்சொன்ஞ
ன்கு
மிழுக்காவியன்றதறம். ... ...
... 5.

அன்றறிவாமென்ஞதறஞ் செய்கமற்றது
பொன்றுங்காற்பொன்ருத் துணய்.

... 6.

திறத்தாறிதுவெனவேண்டா சிவிகய்
உறுத்தாரோ ரேர்ந்தானிடய். ... ... 7.

பாழ்நாள்படாமய் நன்ருற்றினக்தொருவன்
வாழ்நாள்வழியடய்க் குங்கல். ... ... 8.

இறத்தின்வருவதே யின்பமற்றெல்லாம்
புறத்த புகழுமில. ... ... ... ... 9.

அயற்பாலதோரு மறனேயொருவற்
குயற்பாலதோரும் பழி. ... ... ... 10.

[16]

## அறத்தினது முறைமய் வாழ்த்து. (4)

(உலகோர்க்கு) ஆகுதலயும் செல்வத்தயுங் கொடுக்கின்ற அறத்திடத்தமுறய் உயர்ச்சியினு மேலான உயர்ச்சியர்தோ (மக்களாகிய) உயிருக்கு. ... 1.

(உலகோர்க்கு) அறத்திடத்த முறயுயர்ச்சியினு மேலான உயர்ச்சியுமில்லய் அவ்வுயர்ச்சியயக் கெடுத்தலினிடத்த கேட்டினு மேலாக இல்லய் கேடுகள். ... 2.

(மாந்தரியன்முறயிற்) பொருந்தும்வகயாலே அறத்துக்குரியவினய்களய் (இடயில்) ஒழிந்துவிடாமற் செல்லுமிடமெல்லாஞ் செய்தல்வேண்டும். ... ... 3.

(ஒரு வனியன்முறயில்) ஆகுமுள்ளத்திற் குற்றமில்லாதவனுகுதல் அவ்வளவே அறஞ்செய்தலாம் நரயக்கூட்டம்போல (மேன்மிதந்த) பண்பினவாம் மற்றய. 4.

அழுக்குவழியும் (பிறர் பொருள்) ஆசயுங்கோபமும் இனிமய் பயவாதசொல்லுமாகிய நான்கும் இழுக்காகக் கொண்டு நடய்பெற்றியல்வதே (இயய்முறய்) அறமாம். 5.

(முடிவுவரும்) அக்காலத்தி லறிந்துசெய்வோமென்று கூறுது (மாந்தரியய் முறயால்) அறஞ்செய்யக் கடவர்பின்பு அந்த அறம் (அவர்) சாங்காலத்து சாவாத்துணயாம். 6.

(இறய்முற யறத்தினது) தன்மய்வழி இதுவென்று கூறவேண்டுவதில்லய் பல்லக்கய்த் தாங்கிச் செல்பவரோடு நடத்தினேனிடத்துத் (தானே விளங்கும்). ... 7.

(ஒருநாளும்) வெறுநாளா யொழியாமல் (இறய்முறய்) அறஞ்செய்யின் (அவ்) வகத்தறமானது ஒருவன் வாழுநாளிற் (றுன்பம்) வரும்வழிய யடய்க்குங் கல்லாம். 8.

(தீமய்கள் யியல்பாகவே) ஒழிந்த அறமுறயிடத்துண்டாவதே (உலகோர்க்) கின்பமாம் மற்றயவெல்லாம் (அதற்குப்) புறம்பாயின கீர்த்தியு மில்லனவாம். ... 9.

(முறய்நாட்டற்கு) இடமாகக்கொள்ளும் பான்மயுடயது ஓர்ந்துகாணும் அறஞ்செய்தலாம் ஒருவனுக்கு ஒழித்துவிடும் பான்மயது ஓர்ந்துகாணும் பழியேயாம். 10.

இல்வாழ்வானென்பா னியல்புடைய
மூவர்க்குந்
தொல்லாற்றினின்ற துணை. ...
... 1.

எல்வாழ்வுதுவ்வாதவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வானென்பான் றுணை. ...
... 2.

தென்புலத்தார்தெய்வம்விருந்தொக்கறொன்றுந்
தன்புலத்தா றோம்ப றலை. ...
... ... 3.

பழியஞ் சிப்பாத்தூ ணுடைய்த்தாயின்
வாழ்க்கய்

இழிவஞ்சலெஞ்ஞான்று மில். ...
... 4.

உண்புமறனுமுடய்த்தாயினில்வாழ்க்கய்ப்

ப்ணபுமபயனு மது. ... ... ...
... 5.

போய்ப்பேரா தில்வாழ்க்கயாற்றிற் புறத்தாற்றி
னேய்ப்பெறுவ தெவன். ... ... ... 6.

இயல்பிஞனில்வாழ்க்கய் வாழ்பவனென்பா
னியல்வாருளெல்லாந் தலய். ... ... ... 7.

ஆற்றினெழுக்கியற னிழுக்கா வில்வாழ்க்கய்
நோற்றலினோன்ம யுடய்த்து. ... ... 8.

அறனெனப்பட்டதே யில்வாழ்க்கயக்தும்
நறிதோங்கற்கில்லாயி னன்று. ... ... 9.

வய்யத்துள்வாழ்வாங்கு வாழ்பவன்வானுறயு
மய்யத்துள்வய்க்கப் படும். ... ... ... 10.

## அறத்தினியன் முறய்ப்பகுதி. (5)

(இயல்பாய) இல்லத்தில் வாழ்பவனென்று கூறப்பெறுவோனே (மனய்வி மகன் மகள் என்னும்) இயல்புடய மூவர்க்கும் பழமயான வழியில் நிலய்த்த துணயாம். 1.

விளங்கும் பருவ வாழ்க்கயனுபவியாத சிறுவர்க்கும் (அது) கடந்த முதியர்க்கும் (இயல்பாகிய) இல்லத்தில் வாழ்பவனென்று கூறப்பெறுவோனே துணயாம். 2.

தென்னூ லமிஞருந்தன் றெய்வந்தொழுனரும் விருந்தினருஞ் சுற்றத்தாருந் தானுமென்றாகிய (அய்வரயும் பேருளன்) றன் புலவழியாலோம்புதல் தலய்மயாம். 3.

(அவ்வாறோம்பாப்) பழிகட்கஞ்சிப் பகுத்துண்ணுதலயுடயதாகிய விடத்துப் (பேருளர்) வாழ்க்கயான் து இழிவிற்கஞ்சுதலெக்காலத்தும் இல்லய். ... ... 4.

(பிறர்க்குதவும்) உணவும் அறஞ்செய்தலும் (இயன் முறயராய (ஆய்வாளர்க்கு) உடயதாகியவிடத்து (அவரது) இல்வாழ்க்கய்க்குரிய குணமும் பயனுமதுவேயாம். 5.

(ஆய்வாளர் தமதுமனம்) போய்ப் (பலவழியும்) பேராமல் (இயல்பாகிய) இல்வாழ்க்கய்செய்யுமிடத்த பயனிலும் புறம்பாயவழியின்கட் பொருந்திப் பெறும்பயன்யாது. 6.

இயன்முறயால் (ஆய்வாளரோடும்) இல்வாழ்க்கயில் வாழ்பவனென்னப்பெறும் வீழ்வாளனே இயங்குகின்ற (முறய்ஞ) ருளெல்லாந் தலய்வனுவான். ... 7.

(பேருளரும் ஆய்வாளரும் வீழ்விற்குரிய) வழியின் கண் ஒருவரயொருவர் நடத்தி அறஞ்செய்தலிற் றவருத இல்வாழ்க்கயானது நோன்பிடத்த பெருமயுடயதாம். 8.

அறமுடயானெனப்படுவதே இல்லத்துவாழும் வாழ்க்கய் முறயாம் (அவ்) வகத்தியல்பு (பிறர்வாழ்வின்) நன்மயுயருதற்கு இடமாகிய விடத்து (மிக) நன்ரும். ... 9.

(தனது) வய்ப்பிடத்துள் வாழவேண்டு முறய்ப்படி வாழுகின்றவனது (வாழ்வுக்குத்) தூய்மய்தங்கிய நடுவிடத்துள் வய்த்தற்குரிய (தகுதி) உண்டாகும். ... 10.

[19]

## பேருண்மய்வகய். (6)

கொளத்தக்கமாண்புடயளாகித்

தற்கொண்டான்

வளத்தக்காள்வாழ்க்கய்த் துணய். ...

... 1.

மனய்மாட்சியில்லாள்க ணில்லாயின்

வாழ்க்கய்

என்ய்மாட்சித்தாயினு மில். ... ...

... 2.

இல்லதெனில்லவண்மாண்பாணு லுள்ளதென்
வல்லவண்மாணுக் கடய். ... ... ... 3.

பெண்ணிற்பெருந்தக்கயாவுள கற்பென்னு
முண்மயுண்டாகப் பெறின். ... ... ... 4.

தொய்யற்ருெழா அள்கொழுனற்ருெழுதெழுவாள்
பெய்யெனப்பெய்யு மழய். ... ... ... 5.

தற்காத்துத்தற்கொண்டாற் பேணித்தகய் சான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். ... 6.

சிறய்காக்குங்காப்பெவன்செய்யு மகளிர்
கறய்காக்குங் காப்பே தலய். ... ... ... 7.

பெற்ருற்பெரிற்பெறுவர் பெண்டிர்பெருஞ்சிறப்
புற்றவர்வாழு முலகு. ... ... ... 8.

எறுபோற்றில்லிலோர்க்கில்ல யிகழ்வார்முன்
பேறுபோற்பீடு நடய். ... ... ... 9.

மன்கலமென்பமனய் மாட்சி மற்றத
னன்கலநன்மக்கட் பேறு. ... ... ... 10.

[20]

## இயன்முறயோர் பேறுகொண்டாளும்வகய். (6)

(இயன்முறயக்) கொள்ளத்தக்க மாட்சிமயுடயளாகித் தன்னய்க் கொண்டவனது வளத்துக்குத்தக்க செயலுடயாளே (முற்றய்வற்கு) வாழ்க்கய்த்துணயாம். ... 1.

இல்லத்துக்குரிய மாண்பானது (இயன்முறய்வனது) இல்லாள்கண் இல்லயாமிடத்து (அவன்) வாழ்வானது எவ்வளவு மாண்பதாயவிடத்தும் (பயன்) இல்லயாம். 2.

(நோற்றற்கு) இல்லாததுயாது இல்லாளிடத்து மாண்புளதாமானல் உள்ளதுயாது வலிமயுள்ள அவ்வில்லாள் மாட்சிமய்ப்படாத கடயிடத்து. ... ... 3.

(இயன்முறய்வன்பெறும் பேறுகளுள்) பெண்ணிடத்த பெருமயினும் பெரியதகுதியுடயன எவயிருக்கின்றன கற்பென்னு (நோற்றல்) உண்மயுண்டாகப் பெறுமிடத்து. 4.

அகமகிழ்வுடைய பிறனைத்தொழாதவளாய்ச் (சால்பாற்றனைக்கொண்ட இயன்முறவனைத் தொழுது மேற்படுகின்ற இல்லாள் பெய்யென்றுகூறப் பெய்யுமழை. 5.

தன்னியல்பைக்காத்துத் தன்னைக்கொண்டானைப்பேணித் தகுதிச் சால்புடைய சொல்லையுங்காத்து (இவற்றிற்) சோர்வில்லாதவளே (முறைவற்குரிய) பெண்ணும். 6.

(இயன்முறைவன் நோக்கால்) சிறையின்கண் வைத்துக் காக்குங் காவலானது யாது பயனைச்செய்யும் பெண்கள் மாசு (வராமற்) காக்குங்காவலே தலைமையாம். ... 7.

(தலைவனைப்) பெற்ற இயன்முறைவனைப் (பேணுதல்) பெறுமிடத்துப்பெறுவார் பெண்கள் பெரிய சிறப்புப் பொருந்தினோர் வாழும் உலகவாழ்வை. ... 8.

மேற்படுவதாகிய (முறைய்ப்) பாதுகாக்கு மில்லாளில்லாத இயன்முறைவர்க்கு இல்லையாம் இகழுகின்ற மற்றையர் முன்பு பேறுடையார்போலும் பெருமிதநடை. ... 9.

(இயன்முறைவர்க்கு) நிலைத்த அணியென்பன மனையாளது மாட்சியாம் பின்பு அதனினும் நல்ல அணியாவது நல்ல மக்களைப் பெறுதலாம். 10.

[21]

## நோற்பியல். (7)

எக்காலும்யாமறிவதில்லையறிவறிந்த
வக்காற்பேறல்ல பிற. ... ...

... 1.

பண்புடைய்தீயவைய் தீண்டாபழிபிறங்கா
வண்புறமக்கட் பெறின். ... ... ... 2.

அம்பயனென்பதம் மக்களவர் பொருள்

வெம்புவினையான் வரும். ... ...

... 3.

அமிழ்தினுமாற்றவினிதே தம்மக்கள்

குமிழ்கயளாவிய கூழ். ... ...

... 4.

மக்கள்மெய்தீண்ட லுடற்கின்ப மற்றவர்
திக்குசொலின் பஞ்செவிக்கு. ...

... 5.

ஏழ்லினிதியாழினி தென்பர் தம்மக்கள்

கிழமய்ச்சொற் கேளாதவர். ... ...
... 6.

வந்தமகற்காற்று நன்றியவயத்துச்

சிந்தயிருப்பச் செயல்.

... ... ... 7.

மன்னிற்றம்மக்க ளறிவுடய்மய் மாநிலத்
தின்னுயிர்க்கெல்லா மினிது. ... ... ... 8.

போன்றபொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனய்ச்
சான்றோனெனக்கேட்ட தாய். ... ... 9.

என்ஞேற்றற்காற்று முதவியிவன் றந்தய்
குன்ஞேற்றான்கொல்லெனனுஞ் சொல். 10.

## பேருளரது நோற்றற் றன்மய. (7)

(பேருளருக்கு) எங்நாளும் யாமென்னு மகந்தய் உள தாக) அறிவதில்லய் அறிவனவறிந்த அங்நோன்பளவாய பயனுல் அல்லனவெல்லாம் (அதற்குப்) பிறவாம். ... 1.

(பேருளற்குரிய) நற்குணங்களயுடயத்தொழிக்குந் திங் குகள்வந்தடயாவாம் பழிப்புரய் விளங்காதவண்மய் நோ ன்பு பொருந்த் மாந்தர் தம்முட்பெறுமிடத்து. .. 2.

(பேருளருக்கு) அழகிய பயனென்பனவாம் தமக்கு மக்களுண்டாதல் அவரும் பொருளாகத் (தளிர்வுறல் தம் முடல்) வருந்தச்செய்யு நோன்மய் வினயாலுண்டாம். 3.

(பேருளருக்கு) அமிழ்திடத்த சுவயினு மிக இனியதே யாம் (அன்பிற்றளிர்த்த) தமது மக்களுடய குவிந்த கய்க ளால் அளாவப்பட்ட கூழுணவு. ... ... 4.

(பேருளருக்குத்) தமது மக்களுடலய்த் தொடுதலே யுடற் கின்ப விருந்தாம் (தம்மினின்றும்) வேருன அவர் குளறுசொல்லே இன்பவிருந்தாம் செவிகட்கு. ... 5.

(ஏழளவாய்) எழும் இசய்ப்பாடலினியது யாழினிச யினியது என்று கூறுவர் (பேருளராய்த்) தமது மக்களது உரிமய்ச்சொற்களய் (விருந்தாக்) கேளாதபிறர். ... 6.

(பேருக) வந்த மகனுக்குப் (பேருள ரளவாகச்) செய்யவேண்டு நன்மயாவது (மேலோரது) சபய்க்களத்தில் அவன் சிந்தயப் பதிந்திருக்கச்செய்தலாம். ... 7.

(பேருளர்நோன்பில்) நிலய்பெறுமிடத்துத் தமது மக்கட்கறிவுபுடய்மயாகச் (செய்தல்) பெரிய பூமியின்கண்ணுள்ள இனிய வுயிர்க்கெல்லா மின்பமாம். ... 8.

(உருவத்தால்) ஒத்துதித்தவிடத்துண்டா முவப்பினுமதிகமாக உவப்பயடயுந் தன்புதல்வனய் (நோன்மய்) நிறய்ந்தவனென்று சொல்லக்கேட்ட தாய்மனம். ... 9.

(பேருளன்) யாது நோற்றலுக்குச் செய்யு முதவியென்றால் (நோன்புகண்டோர்) இவன்றந்தய் குறுகியதவமுடயான் (அதய்) ஒழி என்னுஞ் சொல்லாம். ... 10.

[23]

## தளிர்வுடய்மய். (8)

அன்பிற்குமுண்டோ வடய்க்குந்தாளார்வலர்
புன்கணீர்பூச றரும். ... ... ... ... 1.

அன்பிலாரெல்லாந் தமக்குரியரன்புடயார்
பின்புமுரியார் பிறர்க்கு. ... ... ... 2.

அன்போடியய்ந்தவழக் கென்பவா ருயிர்க்
கென்போடியய்ந்த தொடர்பு. ... ... 3.

ஒண்பீனுமார்வமுடய்ம யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு. ... ... 4.

அன்புற்றமர்ந்தவழக்கென்ப வய்யகத்
தின்புற்றுறெய்துஞ் சிறப்பு. ... ... ... 5.

அறத்திற்கேயன்புசார்பென்ப வறியார்
துறத்தற்குமக்தே துணய். ... ... ... 6.

மென்புலதனய்வெயிற் போலக் காயுமே
யன்பில தன யறம். ... ... ... ... 7.

உற்றநோன்பில்லா வுயிர்வாழ்க்கய்வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று. ... ... ... 8.

இகத்துறுப்பெல்லாமெவன் செய்யும்யாக்கய்
அகத்துறுப்பன்பி லவர்க்கு. ... ... ... 9.

அன்பின்வழியதுயிர் நிலய்க்திலார்ப்
புன்புதோல்போர்த்த வுடம்பு. ... ... 10.

## நோற்பினர் தளிர்வுடயராதல். (8)

(நோற்பினர்) அன்பிடத்திற்குமுளதோ (வெளிப்படாது) அடய்த்துவய்க்குந் தாழானது அத்தளிர்வுடயாரது (துன்பங்கண்டுழிப்) புல்லியகண்ணீரே பூத்தலளிக்கும். 1.

(நோன்பிற்குரிய) அன்பில்லாதவர் எல்லாவற்றுனுந் தமக்கே யுரியராயொழிவார் அவ்வன்புடயவர் (தமது) பிற்காலத்து முரியவராவார் பிறர்க்கெல்லாம். ... ... 2.

அன்போடுபொருந்திய வழக்கென்பனவாய் நிறய்ந்த வுயிர்கட்கெல்லாம் (தளிர்க்குந்தன்மய்தத்தம்) எலும்போடு பொருந்திய தொடர்பாம். ... ... ... ... 3.

(நோற்றலினுண்டாம்) ஒண்குணமானது தரும் அன்புடய்மயய் அத்தளிர்வுடய்மய்தரும் (யாவரோடும்) நண்பென்கின்ற கெடாதசிறப்பய். ... ... ... 4.

(நோன்பாற்றுமிடத்து) அன்புபொருந்தி அமர்ந்தவழக்கென்பனவாம் வய்ப்பிடத்தின்கண் (பின்பு) இன்பமுற்றுரடயுஞ் சிறப்பெல்லாம். ... ... ... ... 5.

(நோன்பாற்றும்) அறத்தினுக்கே அன்பு துணயாமென்பனவற்றய றியாதவர்க்கு (அவ்வறியாமயய்த்) தொலய்த்து விடுதற்கும் (அவ்) அகத்தளிர்வே துணயாம். ... 6.

மென்றளிர்ப் புற்களாகிய அதனய் வெயிலானது காய்வதுபோலக் காய்ந்துகெடுக்கும் அன்பில்லாத அந்நோற்றலய் அறமானது. ... ... ... ... ... ... 7.

(அன்பு) பொருந்திய நோன்பில்லாத (பேருளாது) உயிர்வாழ்க்கயானது வன்பாலாகிய பாலய் நிலத்தின்கண் உலர்ந்த மரந்தளிர்க்கு மத்தன்மய்த்தாம். ... ... 8.

இவ்வுலகிற்கு வேண்டுமங்கங்களெல்லா மிருந்தும் (நோன்பிற்கு) யாது பயனய்ச்செய்யும் உடம்பின் அகத்துறுப்பாகிய அன்பில்லாத பேருளருக்கு. ... ... ... 9.

அன்பிடத்தய் வழியாகவுடய நோன்மயே உயிர்கட்கு நிலய்த்தபண்பாம்(அவ்) அகத்தளிர் வில்லாத பேருளர் புல்லிய தோலாற் போர்த்த வெற்றுடம்பினராம். ... ... 10.

[25]

## விருந்துடய்மய். (9)

வேளாண்மயில்வாழ்வதெல்லாம்விருந்தோம்பித்
தேளாண்மய்செய்தற்பொருட்டு. ... ... 1.

சரிந்துபுறத்ததாத்தா னுண்டல்சாவா

வருந்தெனினும்வேண்டற்பாற்றன்று.
... 2.

வருவிருந்துவய்கலுமோம்புவான்வாழ்க்கய்
பருவந்துபாழ்படுதலின்று. ... ... 3.

ஒல்வினய்செய்யாளுறயுமுகனமர்ந்
தெல்விருந்தோம்புவானில். ...

... 4.

வித்துமிடல்வேண்டுங்கொல்லோவிருந்தோம்பிப்
புத்தமிசய்வான்புலம். ... ... ... 5.

ஒல்விருந்தோம்பிவருவிருந்துபார்த்திருப்பான்
வல்விருந்துவானத்தவர்க்கு. ... ... 6.

இனய்த்துணய்த்தென்பதொன்றில்லய்விருந்தின்
வினய்த்துணய்வேள்விப்பயன். ... ... 7.

வேள்வியிற்பற்றற்றேமென்பர்விருந்தோம்பித்
தாள்வான்றலய்ப்படாதார். ... ... ... 8.

உடய்மயுளின்மய்விருந்தோம்பலோம்பா
மடமய்மடவார்களுண்டு. ... ... ... 9.

மோப்பக்குழயுமனிச்சமுகந்திரிந்து
வீப்பக்குழயும்விருந்து. ... ... ... 10.

# நோற்பினர் விருந்துட்யராதல். (9)

(நோற்பினர்) விருப்பத்தி னுட்சியாலில்லத்து வாழ்வ தெல்லாம் புதியரய்ப் பாதுகாத்து (அதனய்த) தெளிவா யாட்சிசெய்தற்பொருட்டேயாம். ... ... ... 1.

வழுவி (நோன்மய்க்குப்) புறம்பாகப் (பேருளன்) றுனு ண்ணுதல் சாவாமய்க்கேதுவான உணவென்று கூறுமிடத் தும் விரும்பும் பான்மயுடயதன்று. ... ... ... 2.

(தன்னில்லத்து) வருகின்ற புதியரய் நாள்தோறும் பாது காப்பவனது நோன்புவாழ்க்கயானது (வீண்)பெருமய் வரப் பெற்றதாய்க் கெடுதலடய்தலில்லய். ... ... 3.

(நோன்மய்) பொருந்தும் வினய்களய்ச்செய்யு மாட்சியா னது பதியும் (இல்)லிடத்தமர்ந்திருந்து விளங்குகின்ற புதிய ரய்ப் பாதுகாப்பவனிடத்து. ... ... ... 4.

விதயய்ப்பதித்துத் (தெரிவித்தல்) வேணடுமென்றொழிய வோ (தன்பால்வந்த) புதியரய்ப் பாதுகாத்துப் புதியவுண வய் உண்பவனது அறிவுக்கு.... ... ... ... 5.

(முன்பு) பொருந்திய புதியரய்ப் பாதுகாத்துப் (பின்பு) வருகின்ற புதியரய் எதிர்பார்த்திருப்பவன் வலிய விருந்தா வான் வானுலகத்திருப்பவருக்கு. ... ... ... 6.

இதுபோலும் (பயன்) அளவயுடயதென்பது (பிறி) தொ ன்றில்லய் புதியரிடத்த வினயினள வினதேயாம் (நோற்றற் குரிய) விருப்பத்தின் பயன். ... ... ... ... 7.

(நோன்பிற்குரிய) வேட்கயிற் பற்றற் ஞெழிந்தோமென் பார் (தம்பால்வந்த) புதியரய்ப் பாதுகாத்து முயற்சியால் தூய்மய்த்தன்மயில் மேற்படாதவர். ... ... 8.

(நோன்மயய்) உடய்மயாகத் தன்னுட்கொண்ட விற்பண் பானது புதியரய்ப் பாதுகாத்தலாம் அவ்வாறேும் பாதமட மயானது மூடரிடத்துண்டு. ... ... ... ... 9.

மோத்தல்செய்யவே வாடிப்போம் அனிச்சப்பூவானது (நோற்பினர்) முகம் வேறுபட்டு நீக்கங்கொள்ளவே வாடி போம் புதியவர் (மனம்). ... ... ... ... 10.

[27].

அளய்வுடய்மய். (10)

இன்சொலாலீரமளய்இப்படிறிலவாந்
துன்பொருள்கண்டார்வாய்ச்சொல்.

... 1.

இன்சொலாலீதலினன்றேமுகனமர்ந்து
பின்சொலனுகப்பெறின். ... ...

... 2.

அன்பினமர்ந்தினிதுநோக்கியகத்தானு

மின்சொலினதேயறம்,  ...

...  ...  3.

துன்புறூஉந்துவ்வாமயில்லாகும்யார்மாட்டு
மின்புறூஉமின்சொலவர்க்கு.  ...  ...
4.

அணய்வுடயனின்சொலனுதலொருவற்
பிணய்வல்லமற்றுப்பிற.  ...  ...

...  5.

அல்லவய்தேயவறம்பெருகுநல்லவய்

எல்லயினியசொலின்.  ...  ...
...  6.

பண்புயர்நன்றிபயக்கும்பயனீன்று
தண்பிற்றலய்ப்பிறியாச்சொல்.  ...  ...  7.

மம்மரினீங்கியவின்சொன்மறுமயு
மிம்மயுமின்பந்தரும். ... ... ... 8.

இன்சொலினிதீன்றல்காண்பானெவன்கொலோ
வன்சொல்வழங்குவது. ... ... ... 9.

இனியவுளவாகவின்னுதகூறல்
கனியிருப்பக்காய்கவர்ந்தற்று. ... ... 10.



## நோற்பினர் அளய்வுடயராதல். (10)

இனிய சொற்களாலே அன்புகலந்து வஞ்சமில்லனவேயாம் (நோற்றற்குப்) பொருந்தும்பொருள்களய்க் கண்டவரது வாயிற்பிறக்குஞ் சொற்கள். ... ... ... 1.

இனியசொல்லாலே (இன்பம்) ஈதலிடத்த நன்மயினும் (நோற்பினனுக்கு) நன்றேயாம் முகமலர்ந்து (ஒருவரிலொருவர்) பின்னுகின்ற சொல்லுடயனகப் பெறுமிடத்து. 2.

(நோற்பினர்) அன்பிடத்துப்பொருந்நி இருந்து இனிமயாவதயாராய்ந்து பார்த்து உள்ளத்தாலாகும் இனியசொல் விடத்ததேயாகும் (அளய்வுடய) அறம். ... ... 3.

துன்பத்தய் மிகச்செய்கின்ற

அனுபவியாமயானத் இல்ல யாகும் யாவரிடத்தும் இன்பத்தய் மிகச்செய்கின்ற இனிய சொற்களயுடய நோற்பினருக்கு. ... ... ... 4.

(தன்பாலடுத்தோருக்குச்) சார்பாகவுடயவனும் இனிய சொல்லினனுமாதலே (நோற்பியலும்) ஒருவனுக்கு அளய்வுடய்மாயாம் அல்லனவா மற்றய பிறவெல்லாம். ... 5.

(நோற்பினருக்கு) அல்லனவாய் தீமய்களெல்லாந் தேய்வடய அறமானது பெருகிவரும் நல்லனவற்றினளவில் நின்று இனியசொற்களய்க் கூறுமிடத்து. ... ... 6.

(நோற்பினருக்கு) நற்குணமுயர்வாகிய நன்மயப்கொடுக்கும் பயனய்த்தந்துசாந்தத்தினின்றும் இடம் வேறுபடாத இனியசொற்கள். ... ... ... ... 7.

(இயல்பாகவே) மயக்கிடத்து நீங்கிய இனியசொற்களானவய் (நோற்பினருக்கு) மறுமய்க்கண்ணும் இம்மய்க்கண்ணும் இன்பத்தய்க்கொடுக்கும். ... ... ... 8.

(பிறர்கூறும்) இனியசொற்கள் (தனக்கு) இன்பம் பயத்தலய்க்காணு நோற்பினன்யாது பயனெழியவோ (பிறர்பால்) வன்மயான சொற்களய்ச் சொல்லுவது. ... 9.

(நோற்பினர் தம்பால்) இனியசொற்கள் உள்ளனவாகவு மின்பம்பயவாத சொற்களய்ச் சொல்லுதல் கனியிருக்கவுங் காயய்க்கவரு மத்தன்மய்த்தாம். ... ... ... 10.

ஊனவர்செய்தவுதவிக்குவய்யகமும்
வானகமுமாற்றலரிது. ... ...
... 1.

ஞாலத்திஞற்செய்தநன்றிசிறிதெனினு
மாலெத்துமாணப்பெரிது. ... ...
... 2.
நன்மயார்செய்தவுதவிநயன்றூக்கிற்
கன்மக்கடலிற்பெரிது. ... ...
... 3.
நள்ளினுண் ணன்றிசெயினும்பன
ய்த்துணயாம்
பள்ளப்பயன்றெரிவார். ... ...
... 4.

உதவிவரய்த்தன்றுதவியுதவி
மதிப்பட்டார்சால்பின்வரய்த்து. ...

... 5.

வன்புற்றுமாசற்றார்கேண்மய் துறவற்க
துன்பத துட்டுப்பாயார் நட்பு. ...

... 6.

எழுமயெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
தொழுமய் துடய்த்தவர் நட்பு. ...

... 7.

நன்றிமறப்பது நன்றன்று நன்றல்ல
மன்றெமறப்பது நன்றி. ... ... ... 8.

சென்றுன்ன வின்னா செயினுமவர்செய்த
வொன்றுநன்றுள்ளக்கெடும். ... ... 9.

ஒன்னன்றிகொன்றார்க்கு முய்வுண்டாமுய்வில்லய்
மன்னன்றிகொன்றமகற்கு. ... ... ... 10.

## பேருளரது சால்புத்தன்மய். (11)

(பேருண்மயில்) உறுதிநிலயுடய முன்னயோர் (முறயாகச்) செய்த உபகாரத்துக்கு மண்ணுலகத்தயும் விண்ணுலகத்தயுங் கய்மாருகக்கொடுத்தாலு மரிதாம். ... ... 1.

உலக ஒழுக்கவிடத்தாற் (பேருளர்) செய்த உபகாரமானது (உருவத்தாற்) சிறியதென்னுமிடத்தும் பெருமயயுடய எதனினும் மாட்சிமயாற் பெரிதாம். ... ... 2.

(சால்புடய) நல்லோர் (கன்மத்தாற்) செய்த உபகாரத்தின் பயனயாராய்ந்து (நடுவாய்ப்) பார்க்குமிடத்து அக்கன்மமாகிய கடவிடத்த பெருமயினும் பெரியதாம். ... 3.

நட்பின்கண் (உற்றபோது) சிறிதாகிய நன்றியய்ச்செய்தவிடத்தும் பனயளவாகும் (நடு நின்று) ஆழ்ந்தபயனய்த் தெரியும் பேருளருக்கு. ... ... ... ... 4.

(அடக்கமாகச்செய்த) உதவியது அளவின் மாத்திரயுடயதன்று (பேருளர்செய்த) உதவியானது அவ்வுதவியயறிவுட்கொண்டவரது மேம்பாட்டிடத்தளவதாம். ... 5.

(அடக்கமுடய்மயில்) வலிமய்பொருந்திக் குற்றமற்றவரது கேண்மயாலே (பேருளர்) விடாது பற்றுக துன்பகாலத்துங் குற்றமாராயாதவரது நட்பய். ... ... 6.

(பேருளர்) எழுதற்றன்மயா லெழுகின்ற பிறப்புமுற்றிலும் நினய்குவார் தம்மிடத்துப் (பிறர்வந்து) தொழுதற்றன்மயய் நீக்கின ஒழுக்க முடயாரது நட்பய். ... ... 7.

(பேருளர் பிறர்செய்த) நன்மயய் மறந்துவிடுவது நல்லொழுக்கமன்று நன்மயல்லாதவய்களய்ச் (செய்த) இடத்தே மறந்துவிடுவது நல்லொழுக்கமாம். ... ... 8.

அகன்றுபோய் நினய்க்கும்படி இன்பம் பயவாவினய்களய்ப் (பிறர்) செய்தவிடத்தும் அவராற்செய்யப்பட்டபொருந்திய நன்மயய்ப் (பேருளர்) நினய்க்க (அது) தீரும். 9.

(தம்மாற்) பொருந்திய நன்மயய்க் கெடுத்தவருக்கு முய்வுண்டாகும் உய்வில்லயேயாம் (பேருண்மய்ச்சால்பிற்கு) நிலய்நாட்டிய நன்மயய்க் கெடுத்தமகனுக்கு. ... 10.



## நடுவுடய்மய். (12)

பாற்றதெனவொன்று நன்றேபகுதியாற்
பேற்றதொழுகப்பெறின். ... ...
... 1.

அச்சமுடயவனுக்கஞ்சிதய்வின்றி
யெச்சத்திற்கேமாப்புடய்த்து. ...
... 2.

நன்றேதரினு நடுவிகந்தாமாக்கத்தய்
வெண்றேயொழியவிடல். ... ...
... 3.

தக்கார்தகவிலரொன்பதவரவர்
பக்கத்தாற்காணப்படும். ... ...
... 4.

ஈடும்பெருக்கமுமில்லல்லநெஞ்சத்து
ளாட்டாமய்சான்றோர்க்கணி. ... ...
... 5.

அடுவல்யானென்பதறிகதன்னெஞ்சந்
திடன்ஞரீஇயல்லசெயின். ... ...

... 6.

நன்றொழீஇவய்யாதுலகநடுவாகத்
தன்றிகழ்த்தங்கியான்றூழ்வு. ...
... 7.

கோடாங்கிச்சீர் தூக்குங்கோல்போலமய்ந்தொருபாற்
சாடாமய்சான்றோர்க்கணி. ... ... ... 8.

உட்கோட்டமில்லது செப்பமொருதலயா
வெட்கோட்டமின்மய்பெறின். ... ... 9.

பிறவளஞ்செய்வார்க்குவாணிகம்பேணிச்
செறிவுந்தமபோற்செயின். ... ... ... 10.

[32]

## சால்பினர் நடுநிலயுடயராதல். (12)

(சால்பினர்) பான்மயுடயதெனப் பொருந்துகின்ற நன்மயேயாம் நடுநிலய்ப்பகுதியால் பயனுடய்த்தாகிய அச்சால்பில் நடக்கப்பெறுமிடத்து. ... ... ... ... 1.

(தீமய்கட்கு) அஞ்சுமியல்புடய சால்பினனது நடுநிலய்
வாழ்க்கயானது அழிவின்றி (அவன்) தன்மயுடயதாம். ... ...
சந்ததிக்குக் காவலாந்
.. ... ... 2.

நன்மையே கொடுப்பதாயவிடத்தும் நடுநிலயப்பாகு பாட்டய்க் கடந்துண்டாகும் வாழ்வய்ச் (சால்பினர்) வெற்றி கொண்டு ஒழியும்படி விடுதல்வேண்டும். ... ... 3.

(சால்பால்) தகுதியுடயார் தகுதியில்லார் என்பதய் அவரவருடய (நடு நிலயினிற்கும்) பாகுபாட்டால் (யாவருங்) காணும்படியான (செயல்) உண்டாம். ... ... 4.

வலிமயும் (செல்வப்) பெருக்கமும் (யாவருக்கும்) இல்லாதனவல்ல நெஞ்சத்துள் (நடுநிலயினின்றும்) அசயாமய் சால்பினருக்கு அழகாம். ... ... ... ... 5.

கெடுதலாவேன் யானென்பதய் (முன்பாகவே சால்பினன்) அறியக்கடவன் தன்மனம் (நடுநிலயத்) திடத்தய் விலகி அல்லனவாய வினய்களய்ச் செய்யுமிடத்து. ... 6.

நன்மயினின்று மொழித்துவய்க்க மாட்டாது உலகமானது நடுநிலயுண்டாகத் தன் (சால்பாகிய) ஒளியினிடத்துத் தங்கி நின்றவனது தாழ்வய். ... ... .... 7.

(தன்கட்சார்ந்த பொருளய்க்) கொள்கய்தரித்து (அதன்) சீர்மயய்த்தூக்கிக் காட்டுந் தராசுபோல் (நடுவாசு) அமய்வுற்று ஒருபக்கஞ் சாயாமயே சால்பினருக்கு அழகாம். 8.

(சால்பினருக்கு) உட்கோணமில்லாத தாகிய செப்பமாகும் ஒரு பக்கமாக எள்ளளவு கோணற்றன்மயும் இல்லாமயப் பெறுமிடத்து. ... ... ... ... 9.

(தீமய்க்கு) வேறுகிய (நடுநிலய்) வளஞ்செய்யுஞ் சால்பினருக்கு வாணிகமாம் பேணுதல்செய்து (பிறர்கட்) பொருந்திய வற்றயுந் தமக்குரியனபோற் செய்யுமிடத்து. 10.

ஆராறமராருளுய்க்குமடங்காமை
யூரிருளுய்த்துவிடும் ...

... ... 1.

அதிநோன்பொருளாவடக்கத்தயாக்க
விதனினூஉங்கில்லயுயிர்க்கு. ...

... 2.

பாற்றுசீர்மைப்பயக்குமறிவறிந்
தாற்றினடங்கப்பெறின். ... ...

... 3.

அலயிற்றிரியாதடங்கியான்றோற்ற

மலயினுமாணப்பெரிது. ... ... ... 4.

பல்லார்க்குநன்றும்பணிதலவருள்ளுஞ்
செல்வர்க்கேசெல்வந்தகய்த்து ... ... 5.

அழூவமுளாமய்போலய்ந்தடக்கலாற்றி
னெழூமயுமேமாப்புடய்த்து. ... ... 6.

ஆகாவார்ராயினுநாகாக்ககாவாக்காற்
சோகாப்பர்சொல்லிழுக்குப்பட்டு. ... ... 7.

ஒன்றானுந்தீச்சொற்பொருட்பயனுண்டாயி
னன்றாகாதாகிவிடும். ... ... ... 8.

ஓயவேசுட்டபுணுள்ளாறுமாறாதே
வாயினாற்சுட்டவடு.... ... ... ... 9.

திறங்காத்துக்கற்றடங்கலாற்றுவான்செவ்வி
அறம்பார்க்குமாற்றினுழய்ந்து. ... ... 10.



சால்பினர் அடக்கமுடயராதல். (13)

(சால்பினர்க்குரிய) அடக்கவழியானது (புல) னமர்த்திய தக்கோருட் செலுத்தும் (அவ்வழியில்) அடங்காமயானது (அதற்கு) உரிய இருளின்கட் செலுத்திவிடும். ... 1.

(சால்பினர்) மேலாகிய நோன்மய்க்குரிய பொருளாக அடங்குதற் பண்பயுண்டாக்கக்கடவர் இதனிடத்த நன்ம யினு மேலாகிய நன்மயில்ல யுயிர்கட்கு. ... ... 2.

(சால்பினருக்கு) நீங்குதலற்ற சிறப்பய்க்கொடுக்கும் அறி யவேண்டுவதயறிந்து (அதற்குரிய) வழியின்கண் அடங்குந் தன்மயய்ப் பெறுமிடத்து. ... ... ... 3.

அலய்வுவந்தவிடத்தும் (சால்பினின்றும்) வேறுபடாது (அதனில்) அடங்கிநின்றவனது தோற்றம் மலயிடத்துள்ள பெருமயினு மிகப் பெருமயுடயதாம். ... ... 4.

பற்பலருக்கும் நன்மயேயாம் பணிதற்றன்மயானது அப் பணிதலுடயாருள்ளும் (அடக்கமாயுதவும்) செல்வமுடயா ருக்கே (பிறிதொரு) செல்வமுடய தகுதியதாம். ... 5.

கடலின்கணுள்ள ஆமயய்ப்போலச் சால்பினர் அய்ம் புலன்களயும் அடக்குதல் செய்யுமிடத்து எழுகின்ற பிறப் பின்கண்ணு மின்பஞ்சூழுந் தன்மயுடயதாம். ... 6.

(சால்பினர்) எவற்றய்க் காவாராயவிடத்தும் நாவய்ப் பாதுகாக்கக்கடவர் காவாக்காலத்துத் துன்பப்படுவார் சொ ற்குற்றத்திலகப்பட்டு. ... ... ... 7.

ஒருவிதத்தாலுந் தீயசொல்லின் பொருளதுபயன் (சால் பினர்பால்) உண்டாகுமிடத்து அப்பொழுதே (எண்ணமுடி யாத) தீதுண்டாகிவிடும். ... ... ... 8.

(உடல்நோய்) தீரும்படி சுட்டபுண் (உடலிலிருந்தாலும்) மனத்திலாறிவிடும் (அங்ஙனம்) ஆறவேமாட்டாது (ஒருவர் சால்புகெட) வாயிடத்த சொற்களாற்சுட்ட வடுவானது. 9.

(சால்பின்) திறத்தைக் காத்து (அதற்காம் வினைகளைக்) கற்று (அவற்றுள்) அடங்குதல் செய்பவன் சமயத்தை பார்த்திருக்கும் (அவனையடையும்) வழியிடம் புகுந்து. 10.

[35].

ஒழுக்குடைமை. (14)

ஒழுக்கம்விழுப்பந்தரலாலொழுக்கம்
பழக்கத்திஞேம்பப்படும். . . . ... ... 1.

சீருறக்காக்கவொழுக்கந்தெரிந்தோம்பி
யாரினுமக்கேதுணை. ... ... ... 2.

ஒழுக்கமுடைமைகுடிமையிழுக்கம்
விழுக்குபிறப்பாய்விடும். ... ... ... 3.

ஒறுப்பினுமோத்துக்கொளலாகும்
. . .

பாாபபான
குறிப்பொழுக்கங்குன்றக்கெடும். ...

... 4.

அழுக்காறுடையான்க ணாக்கம் போன்றில்ல
யொழுக்கமிலான்கணுயர்வு. ...

... 5.

ஏதத்துமொல்காருரவோரிழுக்கத்தி
னுதண்படுபாக்கறிந்து. ... ... ... 6.

எய்தொழுக்கெய்துவர்மேன்மயிழுக்கத்தி
னெய்துவரெய்தாப்பழி. ... ... ... 7.

நன்றிக்குவித்தாகுநல்லொழுக்கந்தீயொழுக்க
மென்றுமிடும்பய்தரும். ... ... ... 8.

ஒழுக்கமுடையவர்க்கொல்லாவேதீய
வழுக்கியும்வாயாற்சொலல். ... ... 9.

பல்லாரோடொட்டவொழுகல்பலகற்று
மல்லாரறிவிலாதார். ... ... ... 10.

# சால்பினர் ஒழுக்கமுடையராதல். (14)

(சால்பினருக்கு) நன்னடையானது மேன்மையைக் கொடுத் தாலால் அந்நன்னடையைப் பயிற்சியிடத்துக்கொண்டு பாது காக்கப் (பயன்) உண்டாம். ... ... ... 1.

(சால்பினர்) சிறப்புப்பொருந்தும்படி காக்கக்கடவர் ஒழு க்கத்தைப் (அதன்பயனைத்) தெரிந்து பாதுகாத்து நிறைவடையு மிடத்தும் (அவ்) அகத்தொழுக்கமே துணையாம். ... 2.

(சால்பினருக்கு) ஒழுக்கமுடைமையே (ஒருவரிலொருவர்) கூடிவாழும் பண்பாம் (அதில்) தவறுதலுளதானல் இழிவு படும் வேற்றுமையுண்டாகிவிடும். ... • ... ... 3.

துன்பமூற்றவிடத்தும் (உறுதவிடத்தோடு) ஒப்பாக்கொ ள்ளு மியல்பாகும்படி பார்ப்பவனுக்கும் குறிப்பாகிய ஒழுக் கமானது குறையவே (சால்பு) கெட்டுவிடும். ... 4.

அழுக்குவழியுடையானிடத்து ஆக்கமானது(இல்லையாதல்) போல இல்லையாகும் (சால்பிற்குரிய) ஒழுக்கமில்லாதவ னிடத்து உயர்ச்சியானது. ... ... ... 5.

துன்பம் வந்தவிடத்தும் (ஒழுக்கத்துத்) தளரார் சால் பிற்குரிய அறிவுடையோர் (அதிற்) றவறுமிடத்து (மேலுமே லுந்) துன்பமுண்டாகும் பாகுபாட்ட யறிவுற்று. ... 6.

(சால்பினர்) பொருந்துகின்ற ஒழுக்கத்தால் அடைவார் மேன்மையைத் தவறுமிடத்தி லடைவார் (வேறெவற்றாலும்) உ ண்டாகாத பெரும்பழியை. ... ... ... 7.

(சால்பினருக்குப் பின்விளயும்) நன்மய்கட்கெல்லாம் வித்தாகும் நல்லொழுக்கமானது தீபவொழுக்கமானது (தற்காலமுதல்) எக்காலத்துந் துன்பமேகொடுக்கும். ... 8.

(சால்பியலும்) ஒழுக்கமுடயாருக்குப் பொருந்ாதன வேயாம் தீமய்பயக்குஞ் சொற்களய்த் தடுமாறியுந் (தமது) வாயாலே சொல்லுதல். ... ... .... 9.

(உலகிற்) பற்பலரோடும் பொருந்த ஒழுகுதலிற் பற்பல வினய்களய்க் கற்றிருந்தும் (சால்பிற்கு) அல்லாதவர் (ஒழுக்க) அறிவில்லாதவரோயாம். ... .. ... 10.

[37]

நோக்கியல். (15)

பிறன்பொரு ளாட்பெட்டொழுகும் பேதய்மய்ஞாலத்
திறம்பொருள்கண்டார்கணில். ... ... 1.

நின்றொரீ நின்றருளெல்லாம்பிறன்கடய் .

என்முரிற்பேதயாரில். ... ... ... 2.

தீமயின்வேறல்லர்மன்றதெளிந்தாரிற்

பேமய்புரிந்தொழுகுவார். ...

... 3.

தேரார்தாராயினுமென்றுந்தினய்த்துணயும்
பேரான்பிறனில்புகல். ... ...
... 4.

எளிதெனவில்லிறப்பானெய்துமெஞ்ஞான்றும்

நெளியாதுநிற்கும்பழி. ... ...

... 5.
பகய்பாவமச்சம்பழியென நான்கு
மிகவாவாமில்லிறப்பான்கண். ... ... 6.

பெண்மயானில்வாழ்வானென்பான்பிறனியலா

ணண்மய் நயவாதவன். ... ... ... 7.

பிறன்மனய்நோக்காதபேராண்மய்சான்றோர்க்
கறனென்றோவான்றவொழுக்கு. ... ... 8.

நலக்குரியார்யாரெனிணுமநீர்வய்ப்பிற்
றெலய்த்தயலாடோடோயாதார். ... ... 9.

பெண்மயானல்லசெயினும்பிறன்வரயா
ணண்மய்நயவாமய்நன்று. ... ... ... 10.



## பேருளரது நோக்கத்தன்மய். (15)

பிறவிடத்தானுக்குரிய பொருளாட்சியய் விரும்பிநடக்கும் பேதய்ப்பண்பானது உலகின்கண் அழியும்பொருளிது வெனக்கண்ட பேருளரிடத்தில்லயாம். ... ... 1.

(ஓர்நிலயில்) நின்று (இடயில்) ஒழிந்து (பின்புவந்து) நின்றவருளெல்லாம் அயலானதிடத்தய் (எமதிடம்) என்றரிடத்தபேதய்மயினும் பேதய்மயுடயார் இல்லய். ... 2.

தீமையிடத்துநின்றும் வேருனரல்லர் நிச்சயமாகத் தெளிந்த வுறவோரிடத்திற் (பொறுமையின்றிச்) செல்லுந் தன்மையய் விரும்பிநடக்கும் பேருளர். ... ... 3.

(ஆண்டுளார் நோக்கந்) தேராவராக இருந்தவிடத்தும் என்பயனுண்டாம் தினயளவு நீங்கானுய் அயலானிடத்துப் பொறுமையின்றிப் பேருளன்புகுதலால். ... ... 4.

(பிறரய்க் கெழுவுதல்) எளிதெனக்கருதித் (தனதியல்) பிடத்தய்க்கடந்து செல்பவனய்ப் பொருந்தும் எக்காலத்தும் பின்வாங்காது நிற்கும் பழிச்சொல். ... ... 5.

பகயும் பாவமும் பயமும் பழிச்சொல்லும் என்பனவாகிய நான்குகுற்றங்களும் நீங்காவா மியல்பிடங் (கெழுவாமற்) கடக்கும் பேருளனிடத்து. ... ... ... 6.

பேணும் (விறற்) றன்மையால் (தனது) இயல்பிடத்துவாழும் பேருளனென்னப் பெறுவான் பிறனுக்குரிய இயல்பாட்சியய் நண்புகொள்ள விரும்பாதவன். ... 7.

(விறலுடய்மயால்) அயலானது மனயிடத்தய் (அடயக் கருதிப்) பார்க்காத பெரியஆண்மயானது நிறய்ந்த பேருளருக்கு அறஞ்செயலொன்றுதானேவிரிந்த ஒழுக்கமுமாம்.8.

(நோக்க) நலத்துக்குரியவர் யாவரொன்னுமிடத்து இணங்குந்தன்மயுள்ள (தம்) வய்ப்பிடத்து நீங்கி அயலிடத்தாட்சியய்த் தோட்களாற்றேயாத பேருளரோயாம். ... 9.

(பேற்றய்ப்) பேணுந்தன்மயாலே நல்ல வின்ய்களய்ச்செய்யு மிடமாயினும் அயலானது வரம்பாட்டியய் (ஒருவர்) நண்பாக விரும்பாமயே (நோக்கிற்கு) நன்னும்.

[39]



பொறயுடய்மய். (16)

தகய்த்தாரய்த்தாங்குநிலம் போலத்தம்ம ய்ப்

புகய்த்தார்ப்பொறுத்தறலய். ...

... 1.

இறுத்தலிறப்பினயென்றுமதனய்

அறுத்தலதனினுநன்று. ... ...

... 2.

இன்மயுளின்மய்விருந்தொராால்வன்மயுள்

வன்மய்மடவார்ப்பொறய். ... ...

... 3.

போற்றிடனீங்காமய்

வேண்டிற்பொறயுடய்மய்
ஊற்றியொழூகப்படும். ... ...

... 4.

ஒறுத்தாரயொன்ருகவய்யாரோவய்ப்பர்
பொறுத்தாரய்ப்பொன்போற்பொதிந்து. ... 5.

ஒன்றற்கொருநாளயின்பம்பொறுத்தார்க்குப்
பொன்றுந்துணயும்புகழ். ... ... ...

6.

திறனல்லதற்பிறர்செய்யினுநோநொந்
செறிவல்லசெய்யாமய்நன்று. ... ... 7.

மிகுதியான்மிக்கவய்செய்தாரய்த்தாந்தம்
வெகுள்வினும்வென்றுவிடல். ... ... 8.

இன்னுச்சொற்றாய்மயுடயாரிறந்தார்வாய்
நொன்னய்ச்சொன்னோற்கிற்பவர். ... 9.

பின்னுதுநோற்பார்பெரியர்பிறர்சொல்லும்
நொன்னய்ச்சொன்னோற்பாரிற்பின். ... 10.

[40]

## நோக்கினர் பொறுமயுடயராதல். (16)

(தன்னய்வெட்டி) மெலியச்செய்தவரய் (முனியாது) தாங்கும் பூமியய்ப்போல (நோக்கினர்) தம்மய்க் கோபஞ்செய்வித்தவரது (பிழயய்ப்) பொறுத்தலே தலய்மயாம். ... 1.

(நோக்கினர்) தணித்தல்வேண்டும் (வரம்பு) கடந்துசெல்லுமிடத்தகோபத்தய் எக்காலத்துமக்கோபத்தய் அறுத்துவிடுதல் அத்தணிப்பிடத்த நன்மயினும் நன்றும். ... 2.

இற்பண்புட் (சிறந்த) இற்பண்பாவது புதியரயொருவா தேற்றலாம் (அதுபோல நோக்கினருக்கு) வலிமயுள் வலிம யாவது அறியாமயுடயார் பிழயப்பொறுத்தலாம். ... 3.

(தத்தமிடநோக்கத்தயப்) பாதுகாத்தற்பண்பு (நோக்கி னர்க்கு) வேண்டுமிடத்துப் பொறயுடய்மயத் (தம்முட்) பெய்துநடக்க (அது தானகவே) உண்டாகும். ... 4.

(பிறர்பிழய்கண்டு) நீக்கினவரய் (நோக்கினர் தம்மில்) பொருந்துவதாக வய்யார் வய்ப்பார் பொறுத்துக்கொண்ட வரய்ப் பொன்னப்ப் பொற்பொதிவுசெய்து. ... 5.

(பிறரோடு) மொன்றுபடுதற்கு (அவ்வொன்றிய) ஒரு நாளயின்பமேயாம் (அவர்பிழயப்ப்) பொறுக்கு நோக்கின ருக்குப் பொன்றுங்காலத்தளவும் புகழின்பமாம். ... 6.

தன்மயல்லாதவய்களய்த் தனக்குப் பிறர்செய்தவிடத்தும் (நோக்கினன்) அந்நோயால் (அவர்) நோகும்படி பொருத்த மல்லா வினய்களய்ச் செய்யாமய் நன்றாம். ... 7.

(தம்செருக்கு) மிகுதியால் மிகுந்த தீமய்கள்செய்த தீய வரய் (நோக்கினர்) தாம் தமது கோபத்தின்கண்ணும் (பொ றுமயால்) வென்று விடல்வேண்டும். ... ... 8.

(பிறர்கூறிய) இனிமயில்லாச் சொல்லின்கண்ணும் தூய்ம யுடயதாகக் கொள்பவராவார் (வரம்பு) கடந்தவர் வாயிற் பிறக்குஞ் சரசமொழிகளய்ப்பொறுக்கவல்ல நோக்கினர். 9.

(உலகப்பற்றில் மனம்) பந்தியாது நோற்பவரே பெரிய ராம் (அவரும்) பிறர்கூறுஞ் சரசமொழிகளய்ப் பொறுத் துக்கொள்ளு நோக்கினரிடத்துப் பின்னுவராம். ... 10.

கெழுவுடய்மய். (17)

ஒழுக்காறுக்கொள்கவொருவன்றன்னெஞ்
சத்
திழுக்காறிலாதவியல்பு. ... ...
... 1.

இழுக்கறலக்தொப்பதில்லயார்மாட்டு
மழுக்காற்றினன்மய்பெறின். ...
... 2.

பேஞக்கம்வேண்டாதானென்பான்பிறஞக்க
மாஞதழுக்கறுப்பான். ... ... ... 3.

ஏதமாய்ந்தல்லவய்செய்யாரிழுக்காற்றி
ஞதண்படுபாக்கறிந்து. ... ... 4.

அழுக்காறுடையார்க்கதுசாலுமொன்னார்க்
கெழுக்கியுட்கேடீன்பது. ... ... ... 5.

உண்பதழுக்கறுப்பான்சுற்றமுடுப்பதூஉ
மெண்பதூஉமின்றிக்கெடும். ... ... 6.

அவ்வித்தழுக்காறுடையானய்ச்செய்யவும்
விவ்வித்துக்காட்டிவிடும். ... ... ... 7.

தீயென்னெனவொருபாவிதிருச்செற்று
வீயுழியுய்த்துவிடும். ... ... ... 8.

ஆடிலாநெஞ்சத்தாலுக்கமுஞ்செவ்வியா
னீடுநினய்க்கப்படும். ... ... ... 9.

அழுக்கற்றகன்ருருமில்லயக்தில்லா
ரிழுக்கத்திற்றீர்ந்தாருமில். ... ... ... 10.

[42]

## நோக்கினர்கெழுவ்லுடையராதல். (17)

(தன்னயன்றிப்பிறரயும்) நடத்துகின்ற வழியாகக் கொள்ளக்கடவன் (நோக்கியலும்) ஒருவன் தனது நெஞ்சின்கண் (கெழுவலில்) இழிவுவழியில்லாத இயல்பய். ... 1.

(நோக்கினருக்கு) இழுக்கற்று விடுதலாய (அவ்) அக்கெழுவலயொப்பது (பிறி) தில்லய் யாவர்கண்ணுமுள்ள அழுக்குவழியிடத்த மாசன்மயய்ப் பெறுமிடத்து. ... 2.

(கெழுவுதல்) பேணுகின்ற ஆக்கத்தய் விரும்பாதவன் என்று (பிறராற்) சொல்லப்பெறுவான் அயலானது ஆக்கத்தன்புசெய்யாது அழுக்கய்மாத்திர மறுப்பவன். ... 3.

குற்றமாவத யாய்ந்துணர்ந்து (கெழுவுதற்கு) ஆகாதனவற்றய்ச் செய்யமாட்டார் (நோக்கினர்) இழிவுவழியிடத்துத் துன்பமுண்டாகும் பாகுபாடறிவற்று. ... 4.

அழுக்குவழியுடயாருக் கதுவேபோதும் பகய்வரய்ப்போலப் (புறத்துமாத்திரம்) பொருந்துதல்செய்து உள்ளே (நோக்கியலபிற்) கேட்டய்க் கொடுத்தற்கு. ... 5.

(தன் வஞ்சவுரயய்) உட்கொள்ளுமதனல் (தன்) அழுக்க யறுப்பவனுகு மொருவன் சுற்றமானது உடுக்கப்படுவதும் மதிக்கப்படுவது மில்லாமற் கெட்டுவிடும். ... 6.

(நோக்கியல்பய்) அவித்து (அதற்குவேறுன) அழுக்கு வழியுடயவனய் (அவன்) செய்கின்ற கெடுவினய்களே (கெழுவலில்) வேறுகப் பிரித்துக்காட்டிவிடும். ... 7.

தீமயென்பது யாதென (வஞ்சித்துத்திரிகின்ற) ஒரு பாவிக்கு (அவ்வஞ்சமே) வாழ்வய்க்கெடுத்து (அவனயும்) கெடும்படியானவிடத்திற் செலுத்திவிடும். ... ... 8.

(நோக்கியல்பில்) அசயாதுநிற்கும் நெஞ்சமுடய ஒருவனது ஆக்கத்தயும் (அதிற்) றிருத்தமுடயவனது நீட்சியயும் நினய்க்கவே (கெழுவுதல்) உண்டாம். ... ... 9.

(தம்முள்) அழுக்கயறும்படிசெய்து (நோக்கத்தில்) நீங்கினவருமில்லய் (அவ்) அகக்கெழுவலில்லாதவர் இழிவீட்டதின்னின்று (ஒருகாலும்) நீங்கினவருமில்லய். ... 10.

[43]

## விறலுடய்மய். (18)

குற்றமாநன்பொருள்வெக்கிற்குடிபொன்றி

யற்றமுமாங்கேதரும். ... ...

... 1.

படுபயன்வெக்கிப்பழிப்படுவசெய்யார்
நடுவன்மய் நாணுபவர். ... ...

... 2.

சிற்றின்பம்வெக்கியறனல்லசெய்யாரே

வெற்றின்பம்வேண்டுபவர். ... ...

... 3.

புன்மய்வெக்குதல்செய்யார்புலம்வென்ற
கன்மயில்காட்சியவர். ... ...

... 4.

அக்கியகன்றவறிவென்னும்யார்மாட்டும்
வெக்கிவெறியசெயின். ... ...

... 5.

பொல்லாதவாற்றின்கணின்முன்பொரு

ள்வெக்கிச்
சொல்லாமய்சூழக்கெடும். ... ...
... 6.

வேண்டற்கவெக்கியாமாக்கம்விளய்வயி

ஞண்டற்கரிதாம்பயன். ... ...
... 7.

வேண்டுதல்செல்வத்திற்கியாதெனின்வெக்காமய்
பூண்டபிறன்கய்ப்பொருள். ... ... 8.

அறனறிந்துவெக்காவறிவுடயார்ச்சேரும்
திறனறிந்தாங்கேதிரு. ... ... ... 9.

வேண்டுதலெண்ணுதுவெக்கின்விறலீனுந்
தீண்டாமயென்னுஞ்செருக்கு. ... ... 10.

(நோக்கினர்) குற்றமுண்டாகப் (பிறரது) நல்லபொருளைய் விரும்புமிடத்து (அவ் விருப்பமானது) அக்குடியைக் கெடுத்து (வெற்றிக்குச்) சோர்வு மவ்விடத்தே தரும். 1.

(பின்) உண்டாகும் பயனைய்விரும்பி (நோக்கிற்குப்) பழியுண்டாவதாகிய வினைய்களைய்ச்செய்யார் நடுவுநிலைய் அல்லாத தன்மைய்க்கு நாணும் நோக்கினர். ... ... 2.

சிறிதாகிய இன்பநுகர்ச்சியைய் விரும்பி அறஞ்செயத லல்லாதவைய்களைய்ச் செய்யவேமாட்டார் (அதற்கு) வேறாகிய பேரின்பத்தைப் விரும்பும் நோக்கினர். ... ... 3.

புன்மையாகிய (செயல்களைய்) விரும்புதல் செய்யார் புலத்தாட்சியைய் வெற்றிகொண்ட கல்வித்தன்மையிடத்திற் றோற்றமுடைய நோக்கினர். ... ... ... ... 4.

(நோக்கினருக்கு) நுண்ணிதாகிவிரிந்த அறிவால் என்பயனுண்டாம் யாவரிடத்தும் (பொருளைய்) விரும்பி வெறிதாகிய செயல்களைய்ச் செய்யுமிடத்து. ... ... 5.

பொளிவில்லாத வழியிடத்துநின்றவன் (பிறர்) பொருளைய் விரும்பி (அதனாற் றன்பொருளிழந்து அதையும்) சொல்லாத விதம் சூழும்படி (அவன் வாழ்வு) கெட்டுவிடும். ... 6.

(நோக்கினர்) விரும்பாதொழிக (பிறர்பொருளைய்) விரும்பு மதனாலுண்டாகு மாக்கத்தைய் (அது) விளையுமிடத்து அனுபவித்தற் கரிதாய்விடுமாம் (அதன்கட்) பயனானது. ... 7.

(நோக்கினர்விறலாக) விரும்புதல் செல்வத்துக்கு எது வென்னுமிடத்தில் விரும்பாமையாம் பொருந்திய பிறனது கய்யாட்சியினுள்ள பொருள்களய். ... ... 8.

அறஞ்செய்தலயறிந்து (பிறர்பொருளய்) விரும்பாத அறிவுடய நோக்கினரய்ப்பொருந்தும் அவர்தன்மயறிந்த வப்பொழுதே (விறலுடய) செல்வம். ... ... 9.

(நோக்கினர் தமக்காக) வேண்டுதலய் நினயாது (பிறர்பொருட்டு) விரும்புமிடத்து வெற்றியய்த்தரும் (அல்லர்த வரய்த்) தொடாததன்மயதென்னுங் களிப்பானது. ... 10.

[45]

பேருண்மய்ப்பயன். (19)

அறங்கூறுனல்லசெயினுமொருவ
னிறங்கூறுனென்றலினிது. ... ... ... 1.

அறனழீஇயல்லவய்செய்தலிற்றீதே
புறனழீஇப்பொய்த்துநகய்.

... ... 2.

புறங்கூறிப்பொய்த்துயிர்வாழ்தலிற்சாத
லறங்கூறுமாக்கந்தரும். ... ... ... 3.

கண்ணின்றுகண்ணறச்சொல்லினுஞ்சொல்லற்க
பிண்ணெஞ்சிற்பின்னோக்காச்சொல். ... 4.

புன்மயாநெஞ்சத்தானன்மய்புறஞ்சொல்லுங்
கன்மயாற்காணப்படும். ... ... ... 5.

தறய்பழிகூறுவான்றன்பழியுள்ளுங்
குறய்தெரிந்துகூறப்படும். ... ... ... 6.

நட்பேறிக்கேளிர்ப்பிரிப்பர்நகச்சொல்லித்
திட்பேறுதேற்றாதவர். ... ... ... 7.

துன்னியார்குற்றமுந்தூற்றுமரபினா
ரென்னய்கொலேதிலார்மாட்டு. ... ... 8.

வன்சுமயாற்றுங்கொல்வய்யம்புறனோக்கி
புன்சொலுரய்ப்பான்பொறய். ... ... 9.

காதுண்ணுங்குற்றம்போற்றங்குற்றங்காண்கிற்பின்
வர்தமென்மன்னுமுயிர்க்கு. ... ... ... 10.

## இயன்முறய்வற்குப் பொருண்மயாலாம்பயன். (19)

அறத்தய்ப் (பிறர்க்குச்) சொல்லானும் (முறய்) அல்லன செய்யுமிடத்தும் (இயன்முறய்வன்) ஒருவனது கெடுதலய்ச் சொல்லானெனப்படுதல் நற்பயனும். ... ... 1.

அறஞ்செய்தலயழித்து அல்லனவற்றய்ச் செய்தலிட்டத் தீமயினுந் தீமயேயாம் (இயன்முறய்வன்) புறம்பாயினு னிலயழித்துப் (பேசிப்) பொய்படுத்துச் சிரித்தல். ... 2.

(இயன்முறய்வன்நோற்பிற்)புறம்பாவனசொல்லிப் பொய் பட்டுயிர்வாழ்தலினும் (அதற்கஞ்சி) இறந்துவிடுவது அற மென்றுசொல்லும் ஆக்கப்பயனய்க் கொடுக்கும். ... 3.

(ஒருவர்தன்) முன்னின்று பார்வய் வேறுபடும்படி கூறு மிடத்தும் (இயன்முறய்வன்) கூறுதொழிக (நோம்பாற்) பிரி வுற்ற நெஞ்சின்கட் பின்வருவத யாராயாதசொற்களய். 4.

(இயன்முறய்வன் சால்பிற்) பொருந்துந்தன்ம யுளதாகும் நெஞ்சமுடயா னல்லாமய்யப் புறத்துக்கூறுகின்ற (பய னில்) தல்வித்தன்மயாற் காணுதலுண்டாம். ... 5.

(ஒருவர்மனத்துத்) தய்க்கும்படியான பழிச்சொற்களய்க் கூறு மியன்முறய்வனுக்குத் தனது பழியயும் (பிறர்) நினய்க் குஞ் (சால்புக்) குறய்வு தெரிந்து கூறுதலுண்டாம். ... 6.

நட்புமேலாகியுங் கேண்மயுடயாரய்ப் பிரித்துவிடுவார் (கேட்போர்) மகிழப்பேசி (நோக்கமுணருந்) திண்மய்ப் பேறுதெளியாதவர். .... ... ... ... 7.

(தமது நோக்கிற்கியயப்) பொருந்திநின்றவரது குற்றங்களயும் (பிறரறியத்) தூற்றும் இயன்மரபுடையார் யாதரவுார் ஒழித்துவிடத்தக்க அயலார்பக்கத்து. ... ... 8.

(நீக்கற்கரிய) வலியசுமயாகச் சுமந்தொழியும் வய்ப்பிடமான பூமியானது புறமாயினனய்ப்பார்த்து இழிவுரய்கூறுமியல்பினனுகிய சுமயய். ... ... ... 9.

(இயய்முறய்வர் தமது) செவிகளுட்கொள்ளும் (பிறரது) குற்றங்களய்ப்போலத் தங்குற்றங்களயுங் கண்டுணர்வராய் விடத்துப் (பயன்குறித்த)வாதம்யாது நிற்குமுயிர்க்கு. 10.



## ஆய்வாண்மய். (20)

பல்லார்முனியப்பயனிலசொல்லுவா
னெல்லாருமெள்ளப்படும். ... ... 1.

நட்டாய்வுபல்லார்முற்சொல்லனயனில
இட்டனுசெய்தலிற்றீது. ... ... ... 2.

பாரிலனெ ன்பதுசொல்லும்பயனில

ஓரித்துரய்க்குமுரய். ... ..
... 3.

நண்புறு நன்மயினீக்கும்பயன்சாராப்
பண்பில்சொற்பல்லாரகத்து. ...

... 4.

சீர்மய்சிறப்பொடுநீங்கும்பயனில
வூர்மயுடையார்சொலின். ... ...

... 5.

மக்குசொற்பாராட்டுவானய்மகனென

லெக்கண்பதடியெனல். ... ...
... 6.

தொயனிலய்சொல்லினுஞ்சொல்லுகசான்றோர்

நயனிலசொல்லாமய் நன்று. ...
... 7.

அரும்பயனுயுமறிவினர்சொல்லா
ரிரும்பயனில்லாதசொல். ... ... ... 8.

மாசுரய்பொச்சாந்துஞ்சொல்லார்மருடீர்ந்த
காசறுகாட்சியவர். ... ... ... ... 9.

சொல்லுகசொல்லிற்பயனுடயசொல்லற்க
சொல்லிற்பயனிலரச்சொல். ... ... 10.

[48]

இயன்முறயள் ஆய்வுகொண்டாளும்வகய்.

(20)

(இயன்முறயினின்ற) பற்பலரும் வெறுக்க (உலகிற்குப் பெண்களால் வருமாய்வுப்) பயனில்லனவெனச் சொல்பவனுக்கு யாவராலு மிகழத்தக்க (இழிவு) உண்டாம். ... 1.

(இயன்முறயள் ஒருவரோடு) நட்புக்கொண்டு (அதற்கான) ஆய்வுநலத்தப் பலர்முன்புஞ்சொல்லுதல் நயமில்லனவாய வய்தலய்நாவாற் கூறலிடத்த தீதினுந்தீதாம். ... 2.

(ஆய்விற்குரிய) முறயில்லாளென்பதய் வெளிப்படக்கூறும் (இயன்முறயள் சூழ்வுப்) பயனில்லாத சொற்களய் உரிமய்பாராட்டிச் சொல்லுஞ்சொற்களே. . ... ... 3.

(ஆய்வாளரோடு) நண்புபொருந்துகின்ற நன்மையினின் றும் நீக்கிவிடும் (இயன்முறயட்குச் சூழ்வுப்) பயன்பொருந் தாப்பண்பில்லாச்சொற்கள் பற்பலர்மனத்தும். ... 4.

(இயன்முறயச்)
ளோடு நீங்கிவிடும்

சீர்மயானது (தனக்குரிய) சிறப்புக்க
(பீடுற்ற) பயனில்லாச்சொற்களய் உரி
மயுடயபெண்கள் சொல்லுமிடத்து. ...

... 5.

(இயன்முறயள்பொருள்) மங்கியசொற்களப் பாராட் டித்திரிபவனய் மகனென்று கூறுதலெவ்விடத்து (பீடுற்ற மனிதருட்) பதரொன்று கூறுதல்வேண்டும். ... 6.

(இயன்முறயள்) தளருநிலயுடய சொற்களய்ச் சொல்லு மிடத்துஞ் சொல்லக்கடவள் (ஊராற்) சால்புடயோருக்கு நன்மயில்லாதசொற்களய்க் கூறுமய்நலலது. ... 7.

(ஊருறலால்வரும்) அரியப்பயனயாய்ந்து காணுமறிவிடமு டய பெண்கள்சொல்லார் (இயன்முறய்க்கு வேண்டும்) பெரி யபயனில்லாத சொற்களய். ... ... ... ... 8.

குற்றம்பொருந்திய சொற்களய்ப் பொய்மயாற்கட்டுண் டுஞ் சொல்லார் (இயன்முறயாய்வால்) மயக்கந்தீர்ந்த அழுக் கறுக்கும் அறிவுடய பெண்கள். ... ... ... 9.

(இயன்முறயள்) சொல்லக்கடவள் சொல்லுமிடத்து(ஆய்வுப்) பயனுடயசொற்களய் சொல்லர்தொழிக சொல்லுமிடத்து அப்பயனில்லாதசொற்களய். ... ... 10.

[49]

## சூழ்வியல். (21)

வீவினயாரஞ்சார்விழுமியாரஞ்சுவார்
தீவினயென்னுஞ்செருக்கு. ... ... 1.

தீயவய்தீயபயத்தலாற்றீயவய்
ஆயினுமஞ்சப்படும். ... ... 2.

இறுவவுளெல்லாந்தலயென்பதீய
செறுவார்க்குஞ்செய்யாவிடல். ... ... 3.

பிறந்தபிறன்கேடுசூழற்கசூழிற்

துன்பத்துக்கியாரோ துணயாவார்தாமுடய
வன்பே துணயல்வழி. ... ... ... 9.

தஞ்சந்தமரல்லரோ திலார்தாமுடய
வஞ்சந்தமரல்வழி. ... ... ... ... 10.

[96]

## பேணினர் நினய்வுடயராதல். (44)

(நினய்வால்) வெதும்பும் நெஞ்சமப்பேணினர்க்குளதா யிருத்தலய்ப் பார்த்துமெவனெனும் நெஞ்சமே ஆய்கின்ற சுற்றத்தார்க்கு ஆகாததாம். ... ... ... 1.

(பேணுதல்) அருத்தலய்வரய்க் கண்டவிடத்தும் அவரய்ப் பகய்வர் என நினய்ந்துசெல்லுதலாற் (பயன்) என்னய் (தலய்வியரது) நெஞ்சிற்கு. ... ... ... 2.

(பிறர்க்கு) இட்டு வாழ்ந்தவருக்குச் சிநேகமானரில்லயென்று சொல்லத்தகுவதோ (எனது) நெஞ்சம் நீயே யென்று அபகரியாதவருக்குப்(பேணினர்)பின்செல்லல்வேண்டும்.3.

துன்பமேபோன்ற நிலயோடு (பேணுதலப்) ஆலோசிக் குந்தலய்வர் யாவரோ (அவருடன் தலய்வியர்) நெஞ்சிற் பொருந்திய பயமுற்று அனுபவிக்குமிடங்காண்கவேறுய்.4.

(இன்பம்) பெருதிருத்தற்குப் பயப்படும் பெற்றவிடத்தும் (பின்வரும்) பிரிவுநினய்ந்து பயப்படும் (ஆதலால்) நீங்காத் துன்பமுடயதென்க (பேணினரது) நெஞ்சம். ... 5.

(பேணினர் தத்தந்தலய்வரய்) எப்படிப்பட்ட இடத்திருந்து நினய்த்தகாலத்து மென்னய் தரும்விருந்து அந்நினய் வேயென்க (அவர்) நெஞ்சத்திற்கு. ... ... 6.

(பேணினர் முற்கூறிய) ஆணயய்மறப்பினு மென்னய் அது கூறிய தலய்வரய் மறக்கலாகாவென்க மாட்சிமயடயாத மடமயானது நெஞ்சிடத்துண்டாகி. ... ... 7.

(பேணுதலய்) இகழுமிடத்துக் குறய்வுண்டாமென்று நினய்வுற்ற தலய்வரது தன்மயய் நினய்க்கு முயிர்கட்கு (இன்பம்) உண்டாகும் (தமது) நெஞ்சத்து. ... ... 8.

(நினய்வின்மயா லுளதாகுந்) துன்பத்துக்கு யாவர்தாந் துணயாகுவார் (பேணினர்) தாமுடய்மயாகப்பெற்ற வலிமயே துணயல்லாதவிடத்து. ... ... ... 9.

(பேணினருக்கு) ஆதாரமாவார் (தத்தந் தலய்வர்முதலிய) தமர்களாம் அல்லாதவரொல்லா மயலாராம் தம்முடய கபடத்தய்த் தமராகக்கொள்ளாதவிடத்து. ... ... 10.

புல்லாதிரா அப்புலத்தயவருறுங்
கல்லஞேய்காண்கஞ்சிறிது. ...

... 1.

அக்கமய்ந்தற்ருற்புலவிய துசிறிது

மிக்கற்ருனீளவிடல். ... ...
... 2.
அலந்தாரய்ல்லஞேய்செய்தற்ருற்றம்மய்ப்

புலந்தாரய்ப்புல்லாவிடல். ...
... 3.
ஊடியவரயுணராமய்வாடிய

வாடன்முதலரிந்தற்று. ... ...
... 4.

பூவன்ன நல்லவர்க்கேவர்புலத்தகய்
காவன்னகண்ஞூரகத்து. ...

... ... 5.

இனிதும்புலவியுமில்லாயிற்காமங்
கனியுங்கருக்காயுமற்று. ... ...

... 6.

ஊடலினுண்டாங்கோர் துன்பம்புணர்வது

மாடுவதன்றுகொலென்று. ...

... ... 7.

நோதலெவன்மற்றுநொந்தாரொன்றக்தறியு
மேதுளரில்லாவழி. ... ... ... 8.

நீருநிழலதினிதேபுலவியு
மேரினர்கண்ணேயினிது. ... ...

... 9.

ஊடலுணங்கவிடுவாரோடென்னெஞ்ச
மாடுவேமென்பதவா. ... ... ... 10.

[98]

## பேணினர்புணர்ச்சி யுடயராதல். (45)

(பேணினர் தம்முட்) புணராதிருத்தலொழிக புலன்களய் (நுகர்வித்தறியாத) அவரய்ப் பொருந்தும் பிளவுபடுநோய் (யாம்) காணேஞ் சிறிது (மெனக்கூறி.) ... ... 1.

(உடலுக்கு) எலும்பு அமய்ந்த அத்தன்மய்த்தாதலாம் (பேணினருக்குப்) புலவியானது அது சிறிதுசிறிதாய் மிகுவதறுமானல் தூரத்தே விட்டுவிடல்வேண்டும். ... 2.

(முன்னமே) அலக்கணுற்றவரய்ப் (பின்னும்) துன்பந்தரு நோய்செய்யுமத்தன்மய்த்தாதலாம் (பேணினர்) தம்மய்ப் புலவியுற்றூரய்ப் புணராதுவிடுதல். ... ... ... 3.

(பேணினர் தம்முள்) ஊடியதன்மயுடயாரய் (இவரித்தன்மயொன) உணராதிருக்கயானது வாட்டமுற்ற ஆட்சியய் அடியிற்கொய்துவிட்ட தன்மய்த்தாம். ... ... 4.

பூவைப்போலு மெல்லியதன்மயுள்ள நல்லபேணினருக்கு அழகாவது (புலத்தோடு) புலம் புணருந் தகுதியாம் காவல யொத்த கருத்துடைய தலைவரிடத்து. ... ... 5.

(பேணினருக்கு) இனியபண்பும் புலவிப்புணர்வு மில்ல யாமிடத்துக் காமத்தாற் கனிகின்ற கருவானது உலர்ந்து போம் (புணர்விற்கு) வேறாகி. ... ... ... 6.

(பேணினர்பா லுண்டாகும்) ஊடுதலிடத்துளதாகு மொருதுன்பம் (இனிநாம்) புணர்வதும் விளையாடுவதும் அல்லாமயய் ஒழிதல் வேண்டுமென்று. ... ... ... 7.

(பேணினர்) வருத்தமடைய்தல்வேண்டும் (தந்தலைவர்) எவனெனும்படி வேறாகிய நோதலடைய்ந்தாரொன்று (அந்த) அகப்புணர்வய் முன்பறியுந்துணையாதலுடையா ரில்லாதவிடத்து. 8.

நீரும் நிழலின்கணுள்ளதானால் (மிக) இனியதேயாம் (அது போலப்) புலவிப்புணர்வும் (பேணுதலுற்ற) அழகுடையாரிடத்தே இனியதாம். ... ... ... ... 9.

ஊடுதற்றொழிலிலே (மனம்) வருந்தும்படி விடுகின்ற தலைவரோடு என் (பயன்குறித்து) நெஞ்சமானது விளையாடுவோ மென்பது (பேணினர்) ஆசயானது. ... ... 10.



உணவுடைய்மய். (46)

கண்ணியலாரெல்லாருங்கண்ணிற்பொதுவுண்பர்
நண்ணேனபரத்தநின்மார்பு. ... ... 1.

சூடியிருந்தேமாத்தும்மினார்யாந்தம்ம

யீடுவாழ்கென்பாக்கறிந்து. ... ... ... 2.

காட்டியசூடினுங்காயுமொருத்திய

யீட்டுகேசூடினீரொன்று. ... ... ... 3.

யாரினுங்காதலமென்றேனவூடினள்
யாரினும்யாரினுமென்று. ... ... ... 4.

இம்மைப்பிறப்பிற்பிரியலனென்றேன
நிம்மயினீர்கொண்டனள். ... ... ... 5.

எல்லினேனென்றேன்மற்றென்மறந்தீரொன்றென்னய்

புல்லாள்புலத்தக்கனள். ... ... ... 6.

ஆருள்ளித்தும்மினேனுகவழித்தழுதா
ளேருள்ளித்தும்மினீரொன்று. ... ... 7.

தும்முச்செறுப்பவழுதாணுமருள்ள
லெம்மய்மறய்த்தீரோவென்று. ... ... 8.

கந்நீருணர்த்தினுங்காயும்பிறர்க்குநீ
ரிந்நீரராகுதிரொன்று. ... ... ... 9.

ஆருள்ளிநோக்கினுங்காயுமனய்த்துநீ
ரேருள்ளிநோக்கினீரொன்று. ... ... 10.

[100]

பேணினர் நுகர்வுடயராதல்.

(46)

(இன்பத்தய்க்) கருதுகின்ற இயல்புடய காண்பினர் யாவருந் (தங்) கருத்திடத்துப் பொதுவாக நுகர்வர் பொருந்தலாற் பயன்யாது பிறர்க்களித்தல்நின்ற மார்பய். ... 1.

(பேணலய்ப்) புனய்ந்திருந்து இன்பமுண்டாகத் தும்மிய தலய்வரய் இரவின்கண் தமது தலய்மய்ப்பெருமயில் வாழ்கவென்க (உணவுடயாரவாது) பாகுபாடறிவுற்று.

... 2.

(உணவுடய்மயய்க்) காட்டும்பொருட்டுத் (தலய்வன்) புனய்ந்தாளுயவிடத்துங் காய்வுகொள்ளுமொரு தலய்வியய்க் கூட்டுகபுனயுமிடத்து நற்குணமூண்டென்று. ... 3.

(உணவுமியாள்) யாவரிடத்த காதலினுங் காதலுடயோமெனக்கூறிப்பொருந்திய இடயிலூடினவளாவாள் யாவரினும் யாவரினும் (என்று பலகாற்) சொல்லி. ... 4.

(உணவுகொண்டதலய்வி) இப்பிறப்பிலே பிரிதல்செய்யேனென்று கூறிப்பொருந்திய நாவால் கண்களினிடத்து (அவ்வன்பால்) நீர்சொண்டவளாவாள். ... ... ... 5.

(தன்றலய்வனோடு தலய்வி யான்) பிரகாசமுடயேன் என்றும் ஏன் வேருக என்னய் மறந்தீரொன்றும் (பயன்) என்னய் (உணவு) பொருந்தாதவள் புலந்துவிடத்தக்கவளாம். 6.

(பேணினர் தந்தலய்வர்) யாரய் நினய்ந்து தும்மினுலுமென்னய் (உணவிற்கு) ஆகுதலாக்கொள்க (அதய்) அழித்தழுதாளயும் (நீர்நம) தழகய்நினய்ந்து தும்மினீரொன்று. 7.

(பேணினர்) தும்மலானது (வந்து பின்பு) அடய்க்க (அதனல்) அழுதாளய் தம்தமராக எண்ணல்வேண்டும் எமது குற்றத்தய் மறய்த்துவிட்டீரோவென்று. ... ... 8.

(பேணினர் தந்தலய்வர்க்குத்) தலய்மய்க் குணங்களயுணர்த்தியவிடத்தும் (அவர் மனம்) பிரகாசிக்கும் பிறர்க்கும் நீவிர் இந்நற்பண்புடயராகக் கடவீரென்று. ... 9.

(உணவின்) அருமயய் நினய்ந்து பார்த்தவிடத்தும் (பேணினரது மனம்) பிரகாசிக்கும் முழுமயும் நீவிர்(எமது) அழகயே நினய்ந்துபார்த்தீரொன்று. ... ... ... 10.

வீழ்வாண்மய்ப் பயன். (47)

ஒல்லய்தவறவர்க்காயினுமூடுதல்
வல்லதவரளிக்குமாறு. ... ... ... 1.

தேடலிற்ரேன்றுஞ்சிறுதுணிநல்லளி
பீடினும்பாடுபெறும். ... . ...
... 2.

நீரியய்புத்தேணுண்டோநிலத்தொடு
மாரியய்ந்தன்னரகத்து. . ... ...

... 3.
பொள்ளவிடா அபுலவியுட்டோன்றுமெ

னுள்ளமுடய்க்கும்படய். ... ...
... 4.

தகவிலராயினுந்தாம்வீழ்வார்மென்றே
ளகறலினுங்கொன்றுடய்த்து. ... ... 5.

உணலினுமுண்டதறலினிதுகாமம்
இணய்தலினூடலினிது. ... ... ... 6.

வீடலிற்றேற்றவர்வென்றாரதுமன்னும்
பாடலிற்காணப்படும். ... ... ... 7.

கூடிப்பெறுகுவங்கொல்லோநுதல்வியர்ப்ப
ஆடலிற்றேன்றியவுப்பு. ... ... ... 8.

ஊடுகமன்ஞேவொளியிழயாமிரப்ப
வாடுகமன்ஞேவிரா. ... ... ... 9.

ஆடுதல்காமத்திற்கின்பமதற்கின்பம்
பீடுமுயங்கப்பெறின். ... ... ... 10.



இயன்முறய்ஞர்க்கு வீழ்வாண்மயாலாம்பயன்.

விரய்விலே தவறுதற்செய்க யவ்வியன்முறய்ஞர்க் குள தாயவிடத்தும் ஊடுதற்ருெழில் வல்லவராகுவது அத்தலய் வரது (பயன்றரும்) அன்பிற்கு மாறுபாடாம். ... 1.

(இயன்முறய்ஞர் தம்முட்டவறு) தேடுமிடத்துண்டாகுஞ் சிறுமயாகிய துன்பம்(அதுதேடாத)நல்லளியானது பெரும யிடத்த பயனிலும் பெருமயய்ப் பெறுவதாகும். ... 2.

(காமுறுதற்குரிய) நீர்மயியய்ந்த புதியநாடொன்றுளதா மோ (தனிமய்) நின்ற வதனேடும் (பயன்) நிறய்வுப்பண்பு இயய்ந்த அத்தன்மய தலய்வரிடத்து. ... ... 3.

(இடயிற்) பொதுக்கவிடாத புலவியினுள் உண்டாீவதாகு மென்க (இயன்முறய்ஞர் காமுற்ற) உள்ளத்தய்ப் (பயனு முது வேருக) உடய்த்துவிடும் படய்க்கலம். ... 4.

தகுதியில்லாதவ ரானவிடத்தும் தாமாகவே விரும்பு மியன்முறய்ஞரது மெல்லியதோட்களய் நீங்குமிடமாகிய அங்கு (ஏமத்திற்குக் குறய்வு) பொருந்துவதுடயதாம். 5.

(உணவு) உண்ணுமிடத்த சுகத்தினும் உண்டவுணவு சீர ணித்தலின்பமாம் (ஏமுறுமியன் முறய்ஞருக்கு) விருப்பம் ஒன்றுபடுமிடத்து ஊடுதலும் (பயன்படு) மின்பமாம். 6.

(பேணுதலய்) விடுமிடத்திற் ருேல்வியுற்ற இயன்முறய் ஞர் வெற்றிபெற்றவராவார் அவ்விடுதல் நிலய்பெற்ற பெ ருமயாக இரவினுங்காணும் (பயன்) உண்டாம். ... 7.

கூடுதலுற்று (இயன்முறய்ஞர் பேணற்பயன்) பெறுவோ மென்பதயொழித்துவிடுக நெற்றிவெயர்வுண்டாக ஊடுதலி னிடத்துண்டாகிய உவர்ப்பால் ... ... ... 8.

(இயன்முறைஞர்) ஊடுதல்செய்க மன்னிய நோயோடு ஒளிபொருந்திய இழைகளையுடையா ளிரவிலிரக்கும்படியாகப் (பயனுற) ஆடல்செய்க நிலைத்த நோயிராவண்ணம். 9.

(தனிமையைப் வெற்றி) ஆடலே (இயன்முறைஞர்) விருப்பத்திற் கின்பமாம் அவ்வாடற்கு மின்பமாம் (தத்தந் தலைவரோடு) பெருமையாகக்கலந்து வாழ்ப்பெறுமிடத்து. ... 10.

[103]

இரண்டாவது இயப்முறைப்பால். (48)

எறுழியய்வீவதேயீகய்மற்றெல்லா
நெறியெதிர்ப்பய்நீரதுடய்த்து. ... ... 1.

எல்லாறெனினுங்கொளறீதுமேலுலக
மில்லெனினுமீதலேநன்று. ... ... 2. இலனென்னுமெவ்வமுரயாம யீதல்

கலனுடையான்கண்ணேயுள. ...

... 3.

இன்னுதிரக்கப்படுதலிரந்தவ
ரன்முகங்காணுமளவு. ... ...

... 4.

ஆற்றுவாராற்றல்பசியாற்றலப்பசிய
யாற்றுவாராற்றலிற்பின். ... ...

... 5.

அற்றாழிபசிதீர்த்தலக்தொருவ
னுற்றான்பொருள்வய்ப்புழி. ... ... 6.

ஆப்பான்மரீஇயவனய்ப்பசியென்னுந்
தீப்பிணிதீண்டலரிது. ... ... ... 7.

தய்த்துவக்குமின்பமறியார்கொருமுடய்மய்
வய்த்திழக்கும்வன்கணவர். ... ... 8.

ஏமத்துமின்றுதமன்றநிரப்பிய
தாமேதமியருணல். ... ... ... 9.

ஏதமன்றின்றுததில்லயினிததூஉ
மீதலியயாக்கடய். ... ... ... ... 10.

[104]

அறத்தினியப் முறய்ப்பகுதி. (48)

(ஒருவன்முறயாக) வலிய இயய்வய் (யாவர்க்கும்) கொடுப்பதே கொடயாம். மற்றயவெல்லாம் வழியெதிர்த்து வரும் பயன்குறித்த குணமுடயதாம். ... ... 1.

(இயய்முறயாய்) விளங்கத்தக்கவழியென்று (பிறர்) கூறுமிடத்துங் கொள்ளுதல் தீதாம் பின்பு உலகநல மில்லயென்னு மிடத்தும் (இயய்வு) கொடுத்தலே நல்லதாம். ... 2.

(யான்) இல்லேனென்னுந் துன்பத்தய்க் கூறுமயும் (இயய்வு) கொடுத்தலுமாய விரண்டும் அணியுடய (இயய்முறய்வனய) ஈவாளனிடத்தே யுள்ளனவாம். ... ... 3.

(ஈவாளருக்கு) இன்பம்பயவாது (பிறரால்) இரக்கப்படுதலால் (தம்பால்) இரப்புற்றாரது (இயய்வு) அல்லாத முகத்தய்க் காண்புறுமளவில். ... ... ... ... 4.

(யாதேனு மொருவினய்) செய்பவருக்கு வலிமயாவது பசியய்ச் சகித்தலாம்(அதுவும்)அப்பசியயாற்றிவிடும்(இயய்முறய்வராய) ஊழாளர் வலியிடத்திற் பிற்பட்டதாம். 5.

(முறய்) அற்றவரது அழிவாகிய பசியய்(இயய்வாற்)றீர்த்தல்வேண்டும் (அந்த) அகமுறயானது ஒரு ஊழாளனுக்குப் (பயன்படு) பொருள் வய்ப்பிடமாம். ... ... 6.

பற்றாலே (தமர்களோடு) மருவிய (இயய்முறய்ஞனய) நாடாளனய்ப் பசியென்றுகூறப்படுந் தீய நோயானது (வருத்தும்படி) தொடுதலரிதாம். ... ... ... ... 7.

(உள்ளத்தூப்) பகிர்ந்து உவப்படய்கின்ற இன்பத்தய் அறியாரொன்பதயொழிக தமக்குடய்மயான இயய்முறயய் (அகத்து)வய்த்துப்(புறத்து)இழக்கும்வன்கண்மயுடயநாடாளர்.8.

(இயய்முறய்) இன்பம் பயக்குமிடத்தும் இன்பம் பயவாது வெளியாக (முறய்) நிரப்புதல்செய்தோர் தாமே தமியராயிருந்து (அறம்) நுகர்தலால். ... ... ... ... 9.

(இயய்முறய்க்கு) குற்றமேயல்லது இன்பம் பயவாதது (வேறொன்) றில்லய் இனிதாகிவிடு மக்குற்றமும் (பிறர்க்கு) ஈதற்றன்மயால் இயய்வுசெய்யாத கடயிடத்து. ... 10.

ஈதலிசய்படவாழ்தலதுவல்ல
தூதியமில்லயுயிர்க்கு. ... ...

... 1.

ஈவாருரய்ப்பவயெல்லாமிரப்பார்க்கொன்

ஞீவாதுநிற்கும்புகழ். ... ...

... 2.

ஒன்றுவுலகத்துயர்ந்தபுகழல்லா

லென்றுகநிற்பதொன்றில். ...

... 3.

ஆற்றுகநீள்புகழாற்றிற்புலவரய்ப்
போற்றுதுபுத்தேளுலகு. ... ...

... 4.

தத்தம்போற்கேடுமுளதாகுஞ்சாக்காடு

மத்தகர்க்கல்லாலரிது. ...

... ... 5.

தோன்றிற்புகழொடுதோன்றுகவக்திலார்
தோன்றலிற்றோன்றுமய் நன்று. ... 6.

மகிழ்படவாழாதார்தந்நோவார்தம்ம
யிகழ்வாரய்நோவதெவன். ... ... 7.

எச்சென்பவய்யத்தார்க்கெல்லாமிசயென்னு
மெச்சல்பெறு அவிடின். ... ... ... 8.

யாக்கயின்வண்பயன்குன்றுமிசயிலாப்.
போக்கய்பொறுத்தநிலம். ... ... 9.

மாழ்கறவாழ்வாரேவாழ்வாரிசயொழிய
வாழ்வாரேவாழாதவர். ... ... ... 10.

இயய்முறய்வன் ஈவுகொண்டாளும்வகய். (49)

(யாவரோடுமியய்வு) ஈதலும் (அதனால்) இசய்வுண்டாக வாழ்தலுமாகிய அதுவேயல்லது இலாபம் இல்லய் (இயய்முறய்வராய) உயிர்கட்கு. ... ... ... 1.

(இயய்) வீதலுடயோ (ரொடுத்துச்) சொல்வனவெல்லாம் (எவயென்றால்) இரப்பவர்க்கு ஒன்றய்விலக்காதுதவு மியய்முறய்வர்மேனிற்குங் கீர்த்தியாம். ... ... 2.

(ஓம்புதல்) பொருந்துவதாக உலகின்கண் (இயய்முறய்வர்க்கு) உயர்ச்சிபெற்ற கீர்த்தியேயல்லது விளக்கமுடயதாக நிலய்பெறுவது (பிறிது) ஒன்றில்லய். ... 3.

(இயய்முறய்வர் ஓம்பும்) வழியாக நீளுங்கீர்த்தி வினய்களய்ச் செய்யுமிடத்து (அவரயல்லது மற்றய்) புல்லரய்ப்பேணாது புதிய (தன்மய்வாய்ந்த) உலகம். ... ... 4.

(பிறர்க்கு வந்தவிடத்தும்)தத்தமக்கு வந்ததுபோலக் கேட்டயும் உண்டாவதாகிய சாக்காட்டயுங் (கொள்ளுதல் காப்புடய) அத்தகுதியார்க்கல்லது (பிறர்க்கு) அரிதாம். 5.

(ஒருவர்) தோன்றுமிடத்துக் (காத்தலால்வருங்) கீர்த்தியோடு தோன்றக்கடவர் (அந்த) அகத்து ஈவில்லாதவர் தோற்றஞ்செய்தலிடத்தகலத்தினுந்தோன்றாமய் நன்றாம்.6.

(நீப்பவய் நீத்து) மகிழ்வுண்டாக வாழாத இயய்முறய்வர் (அங்ஙனம் வாழாமய்க்குத்) தம்மய் நோவாராய்த் தம்மயிகழ்ந்துரய்ப்பாரய் நொந்துரய்ப்பது என்னய். ... 7.

குறய்வென்பனவாம் வய்ப்பிடமுடய இயய்முறய்வார்க் கெல்லாம் (நீப்பாலுளதாகும்) கீர்த்தியென்னும் மெய்ச்சு தற்றன்மய்பெறாது விட்டவிடத்து. ... ... 8.

(தன்) உடலிடத்து (இயல்பா யமய்ந்துள்ள) வளமும் விளய்வுங்குறய்ந்துபோம் (ஈதற்கு) இசய்வில்லாத பொக் குப்போல்பவரய்ச் சுமந்த பூமியானது. ... ... 9.

மங்குதலறும்படி இயய்முறய்வராக வாழ்பவரோ வாழ்க்க யுடயவராவார் அவ்விசய்வு ஒழியும்படி வாழ்பவரே (வே றெவ்வாழ்வுமினும்) வாழ்விலராவார். ... ... 10.

[107].

ஓம்பியல். (50)

பூராருள்செல்வத்துட்செல்வம்பொருட்செல்வ
மூரினர்கண்ணுமுள. ... ... ... 1.

நல்லாற்றூணுடியருளாள்கபல்லாற்று
லல்லார்க்குமக்தேதுணய். ... ... ... 2.

இன்னூருநெஞ்சினார்க்கில்லயிருள்சேர்ந்த
புன்னீருலகம்புகல். ... ... ... 3.

இன்னுயிரோம்பியருளாள்வார்க்கில்லென்ப

வன்னியரஞ்சும்வினய். ... ... ... 4.

அல்லலருளாள்வார்க்கில்லய்வளிவழங்குங்
கல்லமாஞாலங்கரி. ... ... ... 5.

அல்லராய்ப்பொச்சாந்தாரொன்பரருணீங்கிச்
சில்லவய்செய்தொழுகுவார். ... ... 6.

எவ்விலார்க்கவ்வுலகமில்லய்பொருளிலார்க்
கிவ்வுலகமில்லாதியாங்கு. ... ... ... 7.

உற்றற்றார்பூப்பரொருகாலருளற்றா
ரற்றார்மற்றாதலரிது. ... ... ... 8.

தெருளாதான்மெய்ப்பொருள்கண்டற்றாற்றேரி
னருளாதான்செய்யுமறம். ... ... 9.

சலியார்முற்றன்னய்நினய்க்கதான்றன்னி
னெலியார்மேற்செல்லுமிடத்து. ... ... 10.



ஈவாளாது ஓம்பற்றன்மய். (50)

(ஒருவருளொருவர்) நிறைந்த இரக்கமுடையராதலே செல்வங்களிற் (சிறந்த) செல்வமாம் (அது இல்லாப்) பொருட் செல்வங்கள் (ஈதிற்கு) உரியரிடத்து முள்ளனவாம். ... 1.

(ஈவாளர்) நல்லவழியாலே (ஓம்புதலைப்) ஆய்ந்துபார்த்து இரக்கத்தோ டாளக்கடவர் பல்வழியாலும் அல்லாதவர்க்கும் (அந்த) அகத்தோம்பலே (பயன்படு) துணையாம். 2.

இனிய அருளுடைமையை ஆட்சிசெய்யும் நெஞ்சிடமுடைய ஈவாளருக்கு இல்லையாம் மயக்கம்பொருந்திய புல்லிதாகிய குணத்தையுடைய உலகினுட்புகுதல். ... ... ... 3.

இனிதாகிய வுயிர்களையெல்லாம் பாதுகாத்து அருளால் ஆட்சிசெய்யு மீவாளர்க்கு இல்லையென்பனவாம் (அதற்கு) அயலா ரஞ்சுவதாகிய தீயவினைகள். ... ... 4.

துன்பமானது இரக்கத்தோடு (தவத்தை) ஆட்சிசெய்யு மீவாளர்க்கு இல்லை சூறைக்காற்று வழங்கியவிடத்தும்(அசயா) மலைகளையுடைய மாநிலமே சாட்சியாம். ... 5.

(ஈவிற்கு) அல்லாதவராய் மறந்தொழிந்தா ரென்னப்படுவார் அருட்பொருந்துந் (தவஞ்செய்தலை) ஒழிந்து சிறிய வினைகளைச்செய்து நடப்பவர். ... ... ... 6.

(தூய்மையான மன) இயக்கமில்லாத ஈவாளர்க்கு அவ்வுலக நலமில்லையாம் பொருளில்லாத வறியருக்கு இவ்வுலக நலம் (அனுபவித்தற்கு) இல்லாத விதம்போல். ... 7.

(பொருண்முதலிய செல்வங்களைப்) பொருந்தியிருந்திழந்தவர் பொலியக்கிடைப்ப ரொருகாலத்தில் (மன) இரக்கமற்ற ஈவாளர்அற்றவரே(அதின்)மறுதன்மையாதலரிதாம்.8.

(கல்வியில்) தெளிவடையாதவன் மெய்மய்ப்பொருளய்க் கண்ட அந்தன்மய்த்தாதலாம் தேருமிடத்து (உயிர்களய் ஓம்பி) இரக்கஞ்செய்யா ஈவாளன்செய்யும் அறவினய். ... 9.

(உயிரோம்புமீவாளன் வருத்தஞ்செய்தலிற்) சலியாதமிக் கோர்முன்பு (அஞ்சிநிற்குந்)தன்னய் நினய்க்கக்கடவன்தான் தன்னிடத்த வலியினுமெளியவர்மேற் செல்லுமிடத்து. 10.

[109]

அருளுடய்மய். (51)

தன்னூன்பெருக்கற்குத்தான்பிறிதூனுண்பாற்

கன்னியமாளுமருள். ... ...

... 1.

ஆங்காட்சிபோற்றாதார்க்கில்லயருளாட்சி

யூங்கில்லயூன்றின்பவர்க்கு.

... ... 2. நடய்கொண்டார்நெஞ்ச

ம்போனன்றூக்காதொன்ற

ஹுடல்சுவயுண்டார்மனம். ... ...

... 3.

இருளல்லதியாதெனிற்கொல்லாமய்கோற

லருளல்லதவ்வூன்றினல். ... ...

... 4.

உண்ணுமயுள்ளதுயிர்நிலயூனுண்ண

வண்ணுத்தல்செய்யாதளறு. ...

... 5.

உனற்பொருட்டாற்கொல்லாதுலகெனின்யாரு

மினப்பொருட்டாலூன்றருவாரில். ... 6.

புண்ணுமய்வேண்டும்புலாஅல்பிறிதொன்ற
னுண்ண லுணர்வாற்பெறின். ... ... 7.

கயிரிற்றலய்ப்பிரிந்தகாட்சியாருண்ணு
ருயிரிற்றலய்ப்பிரிந்தவூன். ... ... 8.

வியர்சொரிந்தாயிரம்வேட்டலிஞென்ற
ஞுயிர்செகுத்துண்ணுமய்நன்று. ... 9.

கல்லான்புலாலய்மறுத்தாணய்க்கய்கூப்பி
ஒல்லாவுயிருந்தொழூம். ... ... ... 10.

[110]

## ஓம்பினர் இரக்கமுடயராதல். (51)

(ஓம்பினன்) தனதுறுதிநிலய் பெருமயாதற்குத் தான் பிறருடய உறுதிநிலயய்த் தின்பானை லவனுக்கு அயலாய்விடும் (அவனுள்ளத்) தாளுவதாய இரக்கம். ... ... 1.

(பொலி) வாகுகின்ற காட்சியானது (அதய்ப்) பாதுகா வார்க்கில்லய் (அதுபோல) இரக்கத்தினதாட்சி மேற்படுத ஒில்லய் பிறருடம்பய்வருத்து மோம்பினருக்கு. ... 2.

நல்லொழுக்கங் கொண்டவரது நெஞ்சத்தய்ப்போல நன் மயய் நிறுத்துப்பார்க்காது (தம்பாற்) பொருந்தலுடயாருட லின்பத்தய்த்தின்ற ஓம்பினர் மனமானது. ... ... 3.

(ஓம்பினருக்கு) மயக்கமல்லாத(தெளிவு)யாதெனுமிடத் து(குற்றமுடயாரயும்)வருத்தாமல் தண்டித்தலாம் அருளல் லாத(கலக்கம் எதுவெனில்)அவருறுதியய்த்தின்னலாம். 4.

(ஓம்பினர்) அழியாமயய்உட்கொண்டிருத்தலாவதுஉயிர்க ளய்நிலயினிற்கச்செய்தலாம்(அவ்)வுறுதியபழிவுசெய்யவே (அவரய்விழுங்கியபின் உமிழ்தற்கு) வாய்திறவாதுநரகம். 5.

உறுதிபெறுதற்பொருட்டுத் (தம்மனத்தய்) வருத்தாது உலகமென்றவிடத்து (ஓம்பலுற்ற) யாவருள்ளும் இனத்தின் காரணத்தால் அவ்வுறுதியய்த் தருபவரில்லய். ... 6.

வருத்தஞ்செய்யாமய்வேண்டும் (அடய்ந்தோர்) உடம்பய் வேறுகவந்து சார்தலுடயான் (நிலயய்) அழியாதிருக்கயய் (ஓம்பினர்) உணர்ச்சியாற் பெறுமிடத்து. ... ... 7.

தவறுதலாகுமிடத்தினின்றும் பிரிவுற்றகாட்சியுடய ஓம் பினர் அழிவுசெய்யார் உயிர்களது இடநிலய் பிரிந்த உறுதி யயும். ... ... ... ... ... ... 8.

(ஓம்பினர் உடம்பினின்றும்) வெயர்வய் சொரிந்து ஆயிர மாக வேள்விசெய்யுமிடத்த நலத்தினும் ஒன்றலுடய வுயிர் களய் வருத்தியழியாமய் (மிக) நன்றும். ... ... 9.

வருத்தானுய் (தன்பாலடய்ந்தவர்) உடம்பய்விட்டுவிட்ட ஓம்பினனய்க் கய்குவித்து (அவனய்ப்) பொருந்தாவுயிர்க ளும் (அவனருளுடய்மய்க்கு) வணங்கும். ... ... 10.



## தவ முடய்மய். (52)

உற்றநோய்நோன்றலுயிர்க்குறுகண்செய்யாம
யொற்றுந்தவத்திற்குரு. ... ... ... 1.

தக்துதவமுடயார்க்காகுமவமதனய்
அக்திலார்மேற்கொள்வது. ... ... 2.

மற்றயார்துப்புரவுவேண்டிமறந்தார்கொ
லற்றேயவர்கடவம். ... ... ... 3.

ஒன்ஞர்த்தெறலுமுவந்தாரயாக்கலு
மன்னிற்றவத்தான்வரும். ... ... ... 4.

வேண்டியவேண்டியாங்கெய்தலாற்செய்தவ

மூண்டுமுயலப்படும். ... ... ... 5.

தவஞ்செய்வார்தங்கருமஞ்செய்வார்மற்றல்லா
ரவஞ்செய்வாராசயுட்பட்டு. ... ... 6.

சுடச்சுடரும்பொன்போலொளிவிடுந்துன்பத்
தடல்சுடநோற்கிற்பவர்க்கு. ... ... 7.

தன்னுயிர்தானறப்பெற்றானையேனைய
மன்னுயிரெல்லாந்தொழும். ... ... 8.

கூற்றங்குதித்தலுங்கைகூடுநோற்றலி
னாற்றறலைப்பட்டவர்க்கு. ... ... 9.

இலர்பலராகியகாரணநோற்பார்
சிலர்பலர்நோலாதவர். ... ... ... 10.

[112]

## ஓம்பினர் தவமுடையராதல். (52)

(ஓம்பினர்) தம்மைப்பொருந்திய துன்பத்தைச் சகித்தலும் (பிற) வுயிர்கட்குத் துன்பஞ் செய்யாமையும் (ஆகிய இவைகளே) ஒன்றுவதாய தவத்திற்கு வடிவமாம். ... 1.

தகுதிப்பண்பானது தவமுடைய ஓம்பினர்க்குண்டாகும் அவமாகும் அவ்வோம்புதலை அவ்வகைப்பண்பில்லாதவர் மேற்கொள்ளு மதனால். ... ... ... ... 2.

(ஓம்பினர்) ஏனயோரது தூய்மய் வலியய் விரும்பித் (தமக்கு வேண்டுஞ் சுகத்தய்) மறந்தாரொன்பதயொழிக (தமக்கும் விரும்பும்) அத்தன்மயதேயாமவர்களது தவம். 3.

(ஓம்பினருக்குப்) பகய்வரய்வெல்லுதலும் விரும்பிஞரய் வாழ்வுடயராக்குதலுமாகிய விரண்டும்பொருந்துமிடத்துத் தவத்தாலே உண்டாகும். .. ... ... ... 4.

(ஓம்பினர்) விரும்பியவெல்லாம் விரும்பியவாறே அடய்தலாற் செய்யத்தக்கதவத்தய்த் தொடங்கி முயலவே (அதற்குரிய வலிமய்) உண்டாம். ... ... ... ... 5.

தவஞ்செய்பு மோம்பினரோ தமது வினயய்ச்செய்பவராவார் அது செய்யாத ஏனயோர் அவஞ்செய்பவராவார் ஆசயுட்சிக்குண்டு. ... ... ... ... ... 6.

(புடத்தீயானது) சுடவே (அதனூற்) சுடருதல் செய்யும் பொன்னய்ப்போல (நிலய்மய்) விளங்கும் துன்பத்தினது வலிகெட நோற்கும் வலிய ஓம்பினருக்கு. ... ... 7.

தன்னுயிரின்கண் தானென வெழுகின்ற வாணவமறும்படி பெற்ற ஓம்பினனய் வேறாகிய நெருங்கிய வுயிர்களெல்லாம் வணங்கும். ... ... ... ... ... 8.

(தான் கூறும்) வார்த்தயானது (வாயினின்று) பிறந்த வளவிற்றுணய் வந்துதவும் நோற்குமிடத்துவலிமய் மேற்பட்ட ஓம்பினருக்கு. ... ... ... ... 9.

(தவஞ்செய்யாத) கீழ்மக்கள் பலராகியகாரணங் (கருதி) நோற்கு மோம்பினரோ நோன்மயுடயராழ் (அது கருதாது) பலராஞர் நோற்காதவர். ... ... ... ... 10.

வஞ்சமனத்தான்படிற்ருெழுக்கம்பூதங்க

ளஞ்சுமகத்தேநகும். ... ...

... 1. தானுயர்தோற்றமெவன்செய்

யுந்தனனெஞ்சங்
கோனறிகுற்றப்படின். ... ...

... 2.

வலியினிலய்மயான்வல்லுருவம்பெற்றம்

புலியின்ருேல்போர்த்துமேய்ந்தற்று.

... 3.

ஆட்டுவனல்லவய்செய்தல்புதன்மறய்ந்து
பூட்டுவன்புட்சிமிழ்த்தற்று. ... ... 4.

ஏதம்யாதென்பார்படிற்றொழுக்கமெற்றெற்றென்
பாதம்பலவுந்தரும். ... ... ... 5.

சூழ்மாறுறவார் துறந்தார்போல்வஞ்சித்து
வாழ்வாரின்வன்கணாரில். ... ... ... 6.

ஆக்காறுகண்டனயரோனுமகங்குன்றி
யூக்கிற்கரியாருடய்த்து. ... ... ... 7.

மனத்ததுமாசாகமாண்டார்நீராடிப்
பனித்தொழுகுமாந்தர்பலர். ... ... 8.

கணய்கொடிதியாழ்கோடுசெவ்விதாங்கன்ன
குணம்படுபாலாற்கொளல். ... ... 9.

ஒழித்தனுநீட்டலும்வேண்டாவுலகம்
விழய்த்ததொழித்துவிடின். ... ... 10

வஞ்சமார்ந்த மனமுடய ஓம்பினனது பொய்யொழுக்கத்தய் (அவனுட் கலந்துநிற்கும்) பூதங்கள் அஞ்சுந் (தம்) உள்ளத்தே சிரிக்கும். ... ... ... ... 1.

தன்னுடய உயர்ந்த தோற்றத்தயு மெவனென்று சொல்லும்படி செய்யும் தனது நெஞ்சின்கண் தலய்மய் பூண்ட ஓம்பினன் அறியத்தக்க குற்றமடயுமிடத்து. ... 2.

(ஓம்பினருள்) வலிமயிடத்த நிலயுடயானது வலிந்துகொண்டவடிவம் பசுவானது புலியினது தோலய்ப்போர்த்துக் கொண்டு (பயிர்) மேயுந்தன்மய்த்தாம். ... ... 3.

(வினய்) இயக்குகின்ற ஓம்பினன் அல்லனவாய வினய்களய்ச்செய்குதல் புதருள்மறய்ந்து (நாண்) பூட்டுவேடன் பறவய்களய்ப் பிடிக்குந்தன்மய்த்தாம். ... ... 4.

(அகத்துக் குற்றமுடயராய்ப் புறத்துக்) குற்றம் யாதென்றுகேட்கும் ஓம்பினரது வஞ்சநடயானது (இது) எத்தன்மயது எத்தன்மயது என்னும் பாகுபாடு பலவுந்தரும். 5.

(தம்முள்ளததுக்) கலிந்தமயக்கத்தய் நீக்காராய் நீக்கினவர்போல் வஞ்சஞ்செய்து வாழு மோம்பினரிடத்தவன்கண்மயினும் வன்கண்ணரில்லய். ... ... ... 6.

(ஓம்பினர்மேல்) ஆக்குகின்றவழியைக் கண்டார்போன்றிருந்தாரென்றாலு மனங்குறைவுற்று (அதில்) உய்த்தற்கரியாரையுமுடைய திவ்வுலகம். ... ... ... ... 7.

(தமது) மனத்தின்கணுள்ளது குற்றமேயாகவும் (முன்னிருந்து) இறந்தமுதியோரது பண்புடையார்போற் பாராட்டி அச்சுறுத்தி நடக்குமாந்தருமுலகிற் பலராம். ... 8.

பாணமானது (நேரியதாயும் வினையாற்) கொடியதுயாழானது கோணியதாயும் (வினையாற்) செவ்வியது ஆதலால் (ஒருவரைக்) குணம்படுபகுப்பாலேற்கவேண்டும். ... 9.

(ஓம்பினருக்கு) ஒழிவுசெய்தலும் வளர்த்தலுமாகிய விரண்டும் வேண்டாவாம் உலகத்தால் விரும்பப்பட்டதைத் (தாம் விரும்பா) தொழித்துவிடு மிடத்து. ... ... 10.

## [115]

### காப்பியல். (54)

**எள்ளாமைவேண்டுவானென்பானெனைத்தொன்றுங்**
**கள்ளாமைகாக்கதன்னெஞ்சு. ...**

... 1.

**உள்ளத்தாலுள்ளலுந்தீதேபிறன்பொருளைக்**

கள்ளத்தாற்கள்வேமெனல். ...
... 2.
ஆவலாலாகியவாக்கமளவிறப்

பூவிதழ்போலக்கெடும். ... ...
... 3.
மேயாக்கங்கன்றியகாதல்விளய்வின்கண்
வீயாவிழுமந்தரும். ... ...
... 4.
பொச்சாப்பிலன்புடயராதல்பொருள்கருதி
யிச்சயாற்பார்ப்பார்கணில். ... ...

5.
அன்றளவினின்றெழுகலாற்றுர்களவின்கட்

கன்றியகாதலவர். ... ...

... ... 6. ஆற்றலிற்கா ரறிவாண்மய

ளவென்னும்
போற்றல்புரிந்தார்கணில். ... ...

... 7.

அளவறிந்தார்நெஞ்சத்தறம்போலநிற்குங்
களவறிந்தார்நெஞ்சிறகரவு. ... ... 8.

வெற்றனசெய்தாங்கேவீவர்களவல்ல
தெற்றியதேற்றுதவர். ... ... ... 9.

கள்வார்க்குத்தள்ளுமுயிர்நிலய்கள்ளார்க்குண்
டொள்வாழ்வுபுத்தேளுலகு. ... ... 10.



ஈவாளரது காத்தற்றன்மய். (54)

(பிறரால்)இகழாதிருத்தற் பண்பை விரும்புமீவாளன் என்னப்பெறுவோன் எவ்வளவாதல் யாதொருபொருளையுங் களவுசெய்யாமையைக் காக்கக்கடவன் தன்னெஞ்சில். ... 1.

(ஈவாளர்) மனத்தாலே நினைத்தலுந் தீமையேயாம் பிறனுக்குரியபொருளை (தமக்குரிய காப்பின்றிக்) களவாலே கவர்ந்துகொள்வோ மென்றலை. ... ... ... ... 2.

(பிறர்பொருள் கவரும்) ஆசையாலே (ஈவாளர்க்கு) உண்டாகிய செல்வவிளக்கம் அளவுகெட (மலரினுங் கவரினும் விரைந்து வாடும்) பூவிதழைப்போற் கெட்டுவிடும். 3.

(ஈவாளர்க்கு) அனுபவித்தற்குரிய செல்வத்தில் (விளங்கற்குரிய) அளவுகடந்த ஆசையானது (பயன்) விளையுமிடத்துக்கெடாத துன்பத்தையே கொடுக்கும். ... ... 4.

(நனுகினோர்பால்) தீங்குத்தொடர்ச்சியில்லாத அன்புடைய ஈவாளராகுதல் (அவர்) பொருளைக் (கவர) நினைந்து ஆசையாலே பார்ப்பவரிடத்தில்லை. ... ... ... 5.

அவ்வக்காலங்களில் (நனுகற்குரிய) அளவிடத்து நிலைத்து ஒழுகல்செய்யார் (பிறர்பொருளைக்) களவுசெய்தலிடத்து மிகுந்த விருப்பமுடையவர். ... ... ... 6.

(வினை) செய்தலிடத்துக் (கலங்கும்) மயக்கவறிவாட்சியானது அளவினதென்பதாகிய பாதுகாத்தலை (பிறிதுயிர்களிடத்துச்) செய்த ஈவாளரிடத்தில்லை. ... ... 7.

(பிறிதுயிர்களது இன்னா) அளவறிந்த ஈவாளரது நெஞ்சின்கணுள்ள அறவினைபோல நிற்கும் (பிறர்பொருளைக்) களவுசெய்தற் கறிந்தவரது நெஞ்சின்கண் வஞ்சம். ... 8.

(பயன்படாத) வெறிதாயின செயல்களயேசெய்து அவ் விடத்தே கெட்டுவிடுவார் களவே யல்லது தெளிவாகிய (ம னக்காவல்) தெளிந்துகொள்ளாத ஈவாளர். ... ... 9.

(பிறர்பொருளய்க்) களவுசெய்வோருக்கு ஒழியும் (இயல் பாயுள்ள) உயிர்நிலயும் களவுசெய்யா மனக்காப்புடய ஈவா ளர்க்குண்டு ஒள்ளியவாழ்வு புதியவுலகினுகண். .. 10.

[117]

விளக்குடய்மய். (55)

ஏமமெனப்படுவதியாதெனின்யாதொன்றுந் தோமயிலாதசொலல். ...

... ... 1.

பொய்மயும்வாய்மயிடத்தபுரய்தீர்ந்த பய்மய்பயக்குமெனின். ... ...

... 2.

புன்னெஞ்சறிவதுபொய்யற்கபொய்த்த
பின்
றன்னெஞ்சேதன்னய்ச்சுடும். ...

... 3.

உள்ளத்தாற்பொய்யாதொழுகினுலகத்தா
ருள்ளத்துளெல்லாமுளன். ... ... 4.

வானுறுவாய்மய்மொழியிற்றவத்தொடு
தானஞ்செய்வாரிற்றலய். ... ... ... 5.

பொய்யாமயன்னபுகழில்லயெய்யாமய்
சய்யாவறமுந்தரும். ... ... ... 6.

பொய்யாமய்பொய்யாமயாற்றினறம்பிற.
செய்யாமய்செய்யாமய்நன்று. ... ... 7.

ஆயாண்மய்நீரானமயுமகந்தூய்மய்
காயாதாற்காணப்படும். ... ... ... 8.

வில்லார்விளக்கும்விளக்கல்லசான்றோர்க்கு
வெல்லாவிளக்கேவிளக்கு. ... ... ... 9.

யாமெய்யாக்கண்டவற்றுளில்லயெனய்த்தொன்றும்
ஆமெய்யினல்லபிற. ... ... ... 10.

[118]

காப்பினர் விளக்கமுடயராதல். (55)

(காப்பினர் விளங்கற்குரிய) காவலென்னப்படுவது எது வென்னுமிடத்து யாதொருசொல்லிலுந் தோய்வதாகிய குற்றமில்லாதவற்றய்ச் சொல்லுதலாம். ... ... 1.

(காப்பினருக்குப்) பொய்மய்ச்சொற்களும் மெய்மய்ச் சொற்களிடத்தனவாம் (விளங்கற்குரிய) குற்றமொழிந்த பூசியபயனய்க் கொடுக்கு மென்னுமிடத்து. ... 2.

(காப்பினன்) பொருந்திய நெஞ்சமறிவதாகவே பொய் படுதலொழிக (ஏனெனில்) பொய்பட்டபின்பு தனதுநெஞ் சமே தன்னய்ச் சுடுதல்செய்யும். ... ... ... 3.

(காப்பினன்) உள்ளத்தாலே பொய்படாது நடக்குமிடத் து உலகிலுள்ளவரது மனத்தினுளெல்லாம் (விளக்கமாக) உள்ளவனுவான். ... ... ... ... ... 4.

தூய்மய்பொருந்துவதாகிய உண்மய்ச்சொற்களய்க் (காப் பினர்) கூறுமிடத்து (மேற்பட) தவித்தலோடு (இளய்ப் பாறு) மிடஞ்செய்பவரினு மேலாவர். ... ... 5.

(காப்பினருக்குப்) பொய்படாமயய் ஒத்த கீர்த்தி இல்லய் இடய்விடாமல் (விளக்கமுடயரால்) வெறுக்காத அறவின யயும் (அப்பொய்யாமயே) கொடுக்கும். ... .... 6.

(காப்பினர்) பொய்படாமைய் (வினைப்) பொய்படாவண்ணஞ்செய்யுமிடத்து அறவினைப் பிறவற்றைச் செய்யாமைய் (பிறர்) செய்யாமைய்க்கு நன்றும். ... ... ... 7.

ஆய்ந்துசெய்யுமாட்சியானது (காப்பினருக்குக்) குணத்தா லமைய்வதாம் உள்ளம் (விளங்கு) தூய்மையானது காய்வு செய்யாமையாற் காணும்படி உண்டாம். ... ... 8.

ஒளிநிறைய்ந்த விளக்கும் விளக்குகளல்லவாம் சால்புடைய காப்பினருக்குப் (பிறரால்) வெல்லப்படாத (மெய்மைய்) விளக்கே விளக்காம். ... ... ... ... 9.

(காப்பினருக்கு) யாமென்னு மகந்தையுடலாகக் கண்டனவற்றுளில்லையாம் எப்படிப்பட்ட யாதொரு நலமும் ஆகின்ற வாய்மையிடத்திற்கல்லன பிறவாதலால். ... ... 10.

[119]

நணு குடைய்மைய். (56)

தேக்குழிக்காப்பான்சினங்காப்பானல்லிடத்துக்
காக்கினென்காவாக்காலென். ...

... 1.

செல்லாவிடத்துச்சினந்தீதுசெல்லிடத்துஞ்

செல்லாமேற்றீயபிற. ... ...

... 2.

இறத்தல்வெகு ளியய்யார்மாட்டுந்தீய
வறுத்தலதனல்வரும். ...

... ... 3.

சிகயுமுவகயுங்கொல்லுஞ் சினத்தி
னுகபுமுளவோபிற.

... ... ... 4.

சென்னலங்காக்கிற்சினங்காக்ககாவாக்காற்

சின்னிலய்கொல்லுஞ்சினம். ...

... 5.

ஏமத்திற்சேர்ந்தாரய்க்கொல்லியினமென்னுஞ்
சோமப்பிணயய்ச்சுடும். ... ... ... 6.

கொலத்தய்ப்பொருளென்றுகொண்டவன்கேடு
கலத்தறய்ந்தான்கய்பிழயாதற்று. ... ... 7.

இணரொரிதோய்வன்னவின்னசெயினும்
நணுகின்வெகுளாமய்நன்று. ... ... 7.

உள்ளியவெல்லாமுடனெய்துமுள்ளத்தால்
விள்ளான்வெகுளியெனின். ... ... 9.

இறந்தாரிறந்தாரனயர்சினத்தய்த்
துறந்தார்துறந்தார்துணய். ... ... 10.

[120]

## காப்பினர் அணய்வுடயராதல். (56)

நிறய்க்குமிடமாகிய (வினய்ஞர்பாற்) காப்பவனே கோபத்தய் காக்குங்காப்பினனும் அல்லாத விடத்துக் காக்கினுமென்னய் காவாக்காலு மென்னய். ... ... ... 1.

(காப்பினருக்குச்) செல்லாவிடமாகிய (மேலவர்பாற்) கோபஞ்செய்தால் (தமக்கே) தீதாம் செல்லுமிடமாகிய (வினய்ஞர்பாற்) செல்லுமாறற் றீயனவாய பிறவாம். 2.

(காப்பினர்) ஒழிதலய்ச் செய்யவேண்டும் கோபத்தய் எவர்களிடத்தும் (நணுகல்) தீயும்படியான வறட்டல் அக் கோபத்தா லுண்டாகும் (ஆதலால்). ... ... 3.

(காப்பினரது) தலய்மயயும் மகிழ்ச்சியயும் கொன்றுவிடு கின்ற கோபத்தினிடத்துச் செல்லுவதாகிய நலமுமுள்ள னவாமோ வேறுக. ... ... ... ... ... 4.

(காப்பினர்) செல்லுவதாகிய நலத்தய்க் காக்குமிடத்திற் கோபத்தய்க் காக்கக்கடவது காவாக்காலத்து ஞானநிலய் மயயுங் கொன்றுவிடு மக்கோபம். ... ... ... 5.

இன்பமனுபவிக்குமிடத்து நணுகிறோரய்க் கொல்லுந் தன்மயுடய (கோபத்தீயானது காப்பினருக்கு) இனமென் கின்ற ஆதாயமரக்கலத்தய்ச் சுட்டுவிடும். ... ... 6.

(தனக்குறு நலத்தய்க்) கொல்லுமக்கோபத்தய்ப் பொருளென்று கொண்டகாப்பினன் கெடுதல்கப்பலின் (உள்ளிருந்து அதய்) அடித்தவன்கய் தவறுததன்மய்த்து. ... ... 7.

(சுடர்த்) திரளுடய நெருப்பின்கண் மூழ்கிறைப்போலுந் துன்பந்தருமவய்களய்ச் செய்யுமிடத்தும் (காப்பினர்) நணுகிறைரிடத்துச் சினஞ்செய்யாமய் நன்றும். ... ... 8.

(காப்பினன்) நினய்ந்தனவெல்லாமுடனே கய்கூடும் உள்ளக்கருத்தாலும் வேறுபடான் கோபத்தயுட்கொண்டென்று சொல்லப் பெறுமிடத்து. ... ... ... ... 9.

(கோபத்தால் வரம்பு) கடந்தவர் (உயிரோடிருந்தாலு) மிறந்தவரோ டொப்பாவார் அக்கோபத்தைய் நீக்கிய காப்பி ணர் (துன்பமெல்லாந்) துறந்தாரோ டொப்பாவார். 10.

[121]

பிறி துடைமை. (57)

செய்தலாற்செல்வம்பெறினும்பிறர்க்கின்னா
கொய்தலேமாசற்றார்கோள். ... ... 1.

செய்யாமைச்செய்தவக்கண்ணுமறுத்தின்னா
வய்யாமைமாசற்றார்கோள். ... ... 2.

செய்யாமற்செற்றார்க்குமின்னாதசெய்தபின்
வெய்யவிழுமந்தரும். ... ... ... 3.

உன்னாசெய்தாரயொறுத்தலவர்நாணச்

சென்னயஞ்செய்துவிடல்.

... ... ... 4.

உன்னேயஞ்குவதுண்டோபிறிதிஞேய்
புன்ஞேய்போற்போற்ருக்கடய். ... ... 5.

இன்ஞவெனத்தானுணர்ந்தவய்துன்ஞமய்
பின்ஞம்பிறன்கட்செயல். ... ... ... 6.

மாஞமயெஞ்ஞான்றும்யார்க்குமனத்தாஞ
தாணினயாமய்தலய். ... ... ... 7.

தன்னுயிர்க்கின்ஞமய்தானறிவானென்கொலோ
வின்னுயிர்க்கின்ஞசெயல். ... ... 8.

சிற்படர்முற்பகற்செய்யிற்றமக்கின்ஞ
தற்பகற்ருமேவரும். ... ... ... 9.

நோயெல்லாநோய்செய்தார்மேலவாநோய்செய்யார்
வீயின்மய்வேண்டுபவர். ... ... ... 10.

[122]

காப்பினர் பிறிதாயிஞரயுடயாதல். (57)

(துன்பஞ்)செய்தலாலே செல்வம் பெறுவதாயவிடத்தும் பிறிதாயிஞேர்க்கு (உளதாய) துன்பத்தயு மறுத்துவிடுதலே குற்றமற்ற காப்பினர் கோட்பாடாம். ... ... 1.

(பிறிதாயினோர்) செய்யவொண்ணாத தன்மைகளைச் செய்த அவ்விடத்தும் அதற்கு மாறாகத் துன்பவினைகளை (அவர்மேற்)சுமத்தாமையே குற்றமற்றகாப்பினர்கோட்பாடாம். 2.

(நன்மை) செய்யாமல் (தீமையால்) வருத்துகின்றபிறர்க்கும் துன்பந்தருபவைகளைச் செய்தபின்பு (காப்பினருக்கு) வெவ்விய துன்பத்தைக் கொடுக்கும். ... ... ... 3.

(மனத்தாலும்) நினைக்கவொண்ணாத (தீமை) செய்தபிறரையுங் (காப்பினர்) தண்டித்தலாவது அவர் வெள்கும்படியாகச் செல்லுகின்ற நயத்தைச் செய்துவிடுதலாம். ... 4.

(காப்பினன்) தன்மனத்தின்கண் நேசமுடையவனாகுதலுண்டோ பிறிதாயினோரது வருத்தத்தைத் (தனக்குப்) பொருந்திய வருத்தம்போற் பாதுகாவாவிடத்து. ... ... 5.

(காப்பினன்) துன்பமெனத்தானுணர்ந்தனவற்றைப் பொருந்தாமையாகிய செயலையே தொடர்பு பெற்ற பிறிதாயினனிடத்துச் செய்தல்வேண்டும். ... ... ... 6.

(காப்பினர்) மாட்சிமைப்படாத (துன்பவினைகளை) எக்காலத்தும் யாவர்க்கும் மனத்தாலாகின்ற முயற்சியையும் நினையாதபண்பே முதன்மையாம். ... ... ... 7.

தன்னுடைய உயிர்க்குப் (பிறர்செய் துன்பங்கள்)வருத்தமாயிருத்தலைத் தானே யறிவானென்றொழியத் தக்கதோ இனியபிறிதுயிர்கட்குத் துன்பந்தருவன செய்தலால். ... 8.

(காப்பினர் பிறிதாயினோர்க்குச்) சில துன்பங்களை முதற்பொழுதிலே செய்யுமிடத்து அவருக்கு அத்துன்பமானவை அதுவேபொழுதிற் றாமாகவே (தவறாது) வரும். ... 9.

துன்பமென்பனவெல்லாம் (அத்) துன்பஞ்செய்தவர் மேலனவாம் (ஆதலாற் பிறர்க்குத்) துன்பஞ்செய்யார் கேடின்மையம் விரும்புங் காப்பினர். ... ... ... ... 10.

[123]

## நீப்பியல். (58)

குறய்வினயாதெனிற்கொல்லாமய்கோற
விறுவினயெல்லாந்தரும். ... ... ... 1.

பகுத்துண்டுபல்லுயிரோம்புதனூலோ

ரிகுத்தவற்றுளெல்லாந்தலய். ...

... 2.

கொன்சாரினல்லதுகொல்லாமய்மற்றதன்

பொன்சாரப்பொய்யாமய்நன்று. ...

... 3.

எல்லாறெணப்ப

டுவதியாதெனின்யாதொன்றுஞ்
சொல்லாமய்சூழுநெறி. ... ... ... 4.

எல்லாமய்நீத்தாருளெல்லாங்கொலயஞ்சிச்
சொல்லாறுசூழ்வான்றலய். ... ... ... 5.

ஒல்லாமய்மேற்கொண்டொழுகுவான்வாழ்நாண்மேற்
கொல்லர் துயிருண்ணுங்கூற்று. ... ... 6.

தன்னுயிர்நீப்பினுஞ்செய்யற்கதான்பிறர்
மின்னுயிர்நீக்கும்வினய். ... ... ... 7.

பின்ருகுமாக்கம்பெரிதெனினுஞ்சான்ருேர்க்குக்
கன்றலிணுக்கங்கடய். ... ... ... 8.

புன்மயராகியமாக்கள்புலய்வினய
ரன்மய்தெரிவாரகத்து. ... ... ... 9.

செல்லுயிர்நீக்கியாரென்பர்செயிருடம்பின்
வல்லுயிர்வாழ்க்கயவர். ... ... ... 10.

# ஈவாளரது நீத்தற்றன்மய். (58)

(ஈவாளர்க்குக்) குறய்வாகிய வினயெது வென்னுமித்து (வினய்ஞரய்) உயிரிருக்க உடம்பய் வருத்துதலாம் (அது அவர்) கெடுதற்குரிய வினயெல்லாவற்றயுங் கொடுக்கும். 1.

(ஈவாளர் தமக்குளநலங்களய்ப்) பகுத்தனுபவித்துப் பலவுயிர்களயும் பாதுகாத்தலே நூல்விதித்தோரீந்த நியாயம் எல்லாவற்றினும் முதன்மயுடயதாம். ... ... 2.

(ஈவாளர்க்குப்) பெருமயான (ஒழிவு) சாருமிடத்து நன்றும் (வினய்ஞரய்) வருத்தாமய் வேறதன் பொலிவு சார (அவர்வினயய்ப்) பொய்படுத்தாமய் (அதினும்) நன்றும். 3.

(ஈவாளர்க்கு ஒழிவு) விளங்கும்வழி எதுவென்னுமிடத்து யாதொருவினயிலும் (குறய்வு) சொல்லாமல் (அக்குறய்வய கற்ற) ஆராய்ந்துகொள்ளும் வழியாம். ... ... 4.

விள்க்கமில்லாத தீமய்களய் நீக்கிவிட்டோர் பலருள்ளும் (வினய்ஞரய்) வருத்துதற்கஞ்சி (நூலோர்) சொல்லியவழியே ஆராயும் ஈவாளன் முதல்வனாவான். ... ... 5.

(விடுதல்) பொருந்தாமயய் மேற்கொண்டு நடக்கும் ஈவாளன் வாழும் நாளில் (அவனய்) மேலே வருத்தாது (அகத்தே) உயிரயுண்ணுகின்றமரணம். ... ... ... 6.

(ஈவாளன்) தன்னுயிரைத் (தீயவினையால்) நீக்கியவிடத்தும் (அதையுணர்ந்து) செய்யாதொழிக தான்பிறரது விளங்கும் உயிரை நீக்கிவிடும் (தீமையான) வினைகளை. ... 7.

பின்புண்டாகும் ஆக்கம்பெரியதென்று கூறுமிடத்தும் (உணர்வு) நிறைந்த ஈவாளர்க்கு (வினைசூரை) வருத்தலினிடத்தாகும் ஆக்கம் இழிவுடையதாம். ... ... ... 8.

புல்லியதன்மையை உடையராகிய மனுடர் இழிந்தவினையுடையராவார் அல்லாத பண்பை (நீப்பாகத்) தெரியத்தக்க ஈவாளரிடத்து. ... ... ... ... ... ... 9.

(நீப்பதை நீக்காமல்) இயங்குகின்ற (பிறர்) உயிர்களை நீக்கினவரொன்னப்பெறுவர் குற்றமார்ந்த உடம்பிணிடத்துவலியூவுயிர் வாழ்க்கையுடைய ஈவாளர். ... ... ... 10.



ஒழி வுடைமை. (59)

நில்லாதவற்றை நிலையினவென்றுணரு
மல்லறிவாண்மைகடை. ... ...

... 1.

ஆக்காட்டவைக்குழாத்தற்றேபெரு

ஞ்செல்வத்
தாக்கமதுவிளிந்தற்று. ... ... ... 2.

அற்காவியல்பிற்றுச்செல்வமதுபெற்ற
லற்குபவாங்கேசெயல். ... ... ... 3.

காளியவொன்றுபோறகாட்டியுயிரீரும்
பீளதுணர்வார்ப்பெறின். ... ... ... 4.

நாச்செற்றுவிக்குண்மேல்வாராமுனல்வினய்
தேச்சென்றுசெய்யப்படும். ... ... ... 5.

நெருநலுளனொருவனின்றில்லயென்னு
முரிமயுடய்த்திவ்வுலகு. ... ... ... 6.

மாடுயிர்வாழ்வதறியார்கருதுப
பாடியய்பல்லபல. ... ... ... ... 7.

புடம்பய்தனித்தொழியப்புட்பறந்தற்றே
யுடம்போடுயிரிடய்நட்பு. ... ... ... 8.

உறங்குவதுபோலுஞ்சாக்காடுறங்கிப்
பிறங்குவதுபோலும்பிறப்பு. ... ... 9.

அச்சிலமய் ந்தின் றுகொல்லோவுடம்பினு
ளொச்சிலிருந்தவுயிர்க்கு. ... ... ... 10.

[126]

நீப்பினர் ஒழிவுடயராதல். (59)

நிலய்பெறுது ஒழியும்பொருள்களய் (ஒழியாத) நிலய்ம யுடயனவென் றுணருகின்றமருண்ட அறிவாட்சியானது (நீப்பினருக்கு) இழிவாம். ... ... ... ... 1.

(மயக்கம்) உண்டாக்கும் கூத்தாட்டக்களத்தின்கண் (காண்போர்) கூடுந்தன்மயதாம் பெரியசெல்வம் (அதன்) ஆக்கமும் (நீப்பினருக்கு) அக்கூட்டம் ஒழியுந்தன்மயதாம். 2.

நிலயாத இயல்பயுடயது செல்வம் (ஆதலால் நீப்பினர்) அச்செல்வத்தய்ப்பெற்றால் நிலய்பெறுஞ்செயல்களய் அவ்விடத்தே செய்தல்வேண்டும். ... ... ... 3.

(செல்வம்) அழகியவொருபொருள்போலக் காண்பித்து (உடயாரது) உயிரய்க்கிழித்து விடுங்கருவாந்தன்மயதாம் (அதன் ஒழிவய்) உணர்பவரய் (நீப்பினர்) பெறுமிடத்து.4.

நாவய்ப் (பேசாவண்ணம்) அடக்கிவிக்கலானது மேலிட்டு வருவதற்குமுன்பே (நீப்பினர்) நல்லசெயல்களய்த்தேடிச் சென்றுசெய்யவே (ஒழிவு) உண்டாம் ... ... 5.

நேற்றிருந்தானாகிய ஒருவன் நின்றாற்போலும் (இன்று) இல்லையென்றானென்னும் உரிமையே (நீப்பினருக்கு) உடைய தாகும் இந்த உலகின்கண். ... ... ... 6.

மாட்சிமையோடு (தமது) உயிர்வாழ்வதாகிய (ஒழிவை) அறியாத நீப்பினர் (வீணே) எண்ணுவனபெருமைபொருந்த வில்லாத (எண்ணங்கள்) பலவாம். ... ... ... 7.

இடமானமுட்டை தனியாக ஒழிய (அதனுட்கருவாயிருந் த) பறவை (பருவம்வந்து) பறந்துபோந் தன்மையதேயாம் (நீப்பினருக்கு) உடலோடுயிரிடமுற்ற நட்பானது. ... 8.

(நீப்பினருக்கு விழித்துள்ளபோதே) உறக்கம்வருவது போற் காணப்படும் மரணம் உறங்கியபின் (விழித்து) விளங் குவதுபோற் காணப்படும் பிறப்பு. ... ... ... 9.

(நீப்பினர்) நிலைத்தவீடு (ஒன்றேனும்) அமையப்பெற வில் லையென்றொழிக ஒழிவதாய் உடலிடத்துள் ஒதுக்குக் குடி யிருந்த (தமது) உயிர்க்கு. ... ... ... ... 10.

[127]

## விட லுடைமை. (60)

எதனினெதனினீங்கியானோத
லதனினதனினிலன். ... ... ... 1.

தூண்டினுண்டாகத்துறக்கத்துறந்தபின்
பாண்டவிர்பாலபல. ... ...

... 2.

வேண்டியவய்ந்தன்புலத்தய்விடல்வேண்டு
மீண்டியவெல்லாமொருங்கு. ... ... 3.

இயல்பாகுநோன்பிற்கொன்றின்மயுடய்மய்
மயலாகுமற்றும்பெயர்த்து. ... ... 4.

எற்றித்தொடர்ப்பாடெவன்கொல்பிறப்பறுக்க
லுற்றூர்க்குடம்புமிகய். ... ... ... 5.

செயிர்ந்தெனதென்னுஞ்செருக்கறுப்பான்வானோர்க்
குயர்ந்தவுலகம்புகும். ... ... ... 6.

பற்றிவிடாஅவிடும்பய்கள்பற்றினய்
அற்றுவிடாஅதவர்க்கு. ... ... ... 7.

துலய்ப்பட்டார்தீரத்துறந்தார்மயங்கி
வலய்ப்பட்டார்மற்றயவர். ... ... ... 8.

மலய்வற்றகண்ணேபிறப்பறுக்குமற்றுங்
கலயாமய்காணப்படும். ... ... ... 9.

பற்றுகபற்றற்ருன்பற்றினயப்பற்றய்ப்
பற்றுகபற்றுவிடற்கு. ... ... ...10.

[128]

## நீப்பினர் விடுதலுடயராதல். (60)

(நீப்பினன்) எந்தவினயிடத்து எந்தப்பொருளிடத்துப் (பற்றுவிட்டு) நீங்கினுனே துன்பமுறுதல் அந்த வினயிடத்தும் அந்தப்பொருளிடத்து மிலனுவான். ... ... 1.

(நீப்பினன் வினய்ஞராய்) ஏவுமிடத்துப் (பயன்) உண்டாக (அவர்க்குரிய பொருளய்த்) துறவுசெய்க (அவ்வாறு) துறந்தபின்பு பாழ்படுதலொழியும் பான்மய் பலவாம். ... 2.

(நீப்பினர் வினய்ஞர்க்குரியனவற்றய்) விரும்பிய அய்வகய்ப்புலத்தவாக்களயும் விடுதல்வேண்டும் (அவ்வாறு விட்டாற்) பொருந்தினவாம்(வினய்ப்பயன்) எல்லாம் ஒன்ருக. 3.

(நீப்பினருக்கு) இயற்கையாகும் வல்வினையிடத்தார்க்குப் பொருந்துபொருளைத் (தமக்) கின்மையாக் (கருதுதல்) உடைமையாக் (கருதல்) மயக்கமாகும் பின்பும் வேறுபட்டு.... 4.

(நீப்பினர் வினைஞர்க்குரிய) செலவிடத்தும் (பின் அதில்) தொடர்புறுதல் எவனுக் கென்றொழிந் வேறுபாடறுக்கத் துணிந்தார்க்குத் (தமது) உடம்பு மிகையாகும்... 5.

(வினைஞர்க் குரியவற்றைச்) [illegible] றெழுகின்ற மயக்கத்தை யறுத்துவிடும் நீப்பினன் (நிலை) வாலறிவுடையார்க்கு முயர்ந்த விண்ணுலகினுஞ் செல்லும்... 6.

பற்றிக்கொண்டு (எக்காலத்தும்) விடாவாம் துன்பங்களானவை (வினைஞர்க்குரியவற்றிற்செல்லும்) பற்றிடத்த யறுத்துவிடாத நீப்பினருக்கு. ... ... ... 7.

(வினைஞர்க்குரியவற்றிற் பொருட்சமங்காட்டும்) தராசின்றன்மையுடையாரே தீரத்துறந்தவராவார் மயக்கமுற்று(அப்பொருள்) வலையி லகப்பட்டவராவார் ஏனையநீப்பினர். 8.

(நீப்பினருக்கு வினைப்பொருளில்) மயக்கமற்றவிடத்தே வேறுபாடொழிந்துவிடும் அதையன்றியும் (அவ்வினைஞர் கலைந்தொழியாமையுங் காணும்படி (கருத்து) உண்டாம். 9.

(நீப்பினர்) பற்றக்கடவது (பிறர்பாற்) பற்றுதல் அற்ற வினைஞன்றொடர்பிடத்தை அத்தொடர்பையே பற்றக்கடவது (அவர்க்குரியவற்றிற் செல்லும்) பற்றுவிடுதற்கு. 10.

பொருளல்லவற்றைப்பொருளென்றுணரு
மருளாநுமாணுப்பிறப்பு. ...

... ... 1.

மாசறுமின்பம்பயக்குமருணீங்கிக்
காசறுகாட்சியவர்க்கு. ... ...
... 2.

வானத்தினீங்
கித்தெளிந்தார்க்குவய்யத்தின்
ஞானநணியதுடய்த்து. ...

... ... 3.

கய்யுணர்வெய்தியக்கண்ணும்பயமின்றே
மெய்யுணர்வில்லாதவர்க்கு. ... ... ... 4.

எய்ப்பொருளெத்தன்மய்த்தாயினுமப்பொருள்

கய்ப்பொருள்காண்பதறிவு. ... ... 5.

கற்றீண்டுமெய்ப்பொருள்கண்டார்தலைப்படுவர்
மற்றீண்டுவாராநெறி. ... ... ... 6.

ஓர்த்துள்ளமுள்ள துணரினொருதலையாப்
பேர்த்துள்ளவேண்டாபிறப்பு. ... ... 7.

செம்பொருட்பேதமய்நீங்கச்சிறப்பென்னு
மம்பொருள்காண்பதறிவு. ... ... ... 8.

சார்புணர்ந்துசார்புகெடவொழுகின்மற்றழித்துச்
சார்தராசார்தருநோய். ... ... ... 9.

வாமம்வெகுளிமயக்கமிவ்மூன்ற
ளேமுன்கெடிக்கெடுநோய். ... ... 10.

[130]

நீப்பினர் உணர்ச்சியுடையராதல். (61)

(நீப்பினர் வினய்முடித்தற்குரிய) பொருளல்லாதவற்றய்

(ஆகும்) பொருளென்றுணரும் மயக்கத்தா லுண்டாகும் (தமக்கும் அவர்க்கும்) மாட்சிமைப்படாத வேறுபாடு. 1.

பழுதறுவதான இன்பம் (தானாகவே) உண்டாகும் (ஒன்றை மற்றொன்றாகக் காணும்) மயக்கமொழிந்து (வினைஞர்பாற்) குற்றமற்ற காட்சியுடைய நீப்பினருக்கு. ... 2.

வாலறிவிடத்தால் (மருட்சியினின்றுந்) தெளிவுற்ற நீப்பினருக்குத் (தமது) வைப்பிடமான உலகத்தில் (வினைப்பொருளுணரும்) அறிவுநண்ணியதுளதாம். ... 3.

இடைவகையாய வுணர்வுகள் எல்லாவற்றையு மடைந்தவிடத்தும் பயனில்லையேயாம் (வினைப்பொருளுணரும்) மெய்யறிவு ஒளிசெய்யாத நீப்பினருக்கு. ... ... ... 4.

அடைந்தபொருள்கள் எவ்வெத்தன்மையுடையதாயவிடத்தும் அவ்வப்பொருள்களில் வினைஞர்க்குரிய இடம்படுபொருள்களைக் காண்பதே (நீப்பினர்க்கு) அறிவாம். ... 5.

(வினையுணரக்) கற்றுப்பொருந்துவதாகிய மெய்ம்மைப்பொருளைக்கண்ட நீப்பினர் தம்மிடத்தேயடைவார் வேறாய தீமைக்கடிரண்டு வராதவழியை. ... ... ... 6.

(நீப்பினர்) ஆராய்ந்து மனத்தால் (வினைஞர்க்கு) உள்ளதையுணருமிடத்து ஒரு சார்பிடமாகத் திரும்பி நினைக்கவேண்டுவதில்லை வேறுபாட்டை. ... ... ... 7.

(நீப்பினர்க்கு) செம்மிய பொருட்பேதப்பண்பானது நீங்கும்படியாகச் சிறப்பென்று கூறும் அழகிய (வினைப்) பொருளைக்காண்பதே அறிவாம். ... ... ... 8.

(நீப்பினர் தமக்குரிய) சார்புணர்ந்து (அல்லாத) சார்பு கெடும்படியாக நடக்குமிடத்து (அவரைப்) வேறாகவருத்தி அடையாவாம் அடையும்படி நின்ற நோய்கள். ... ... 9.

(நீப்பினருக்கு) தீச்செயலும் கோபமும் மயக்கமுமாகிய இவ்வ் மூன்றனுடைய துன்பமும் (மனத்திற்) கெடவே கெட்டு விடும் (வினைத்தடுக்கும்) துன்பங்கள். ... ... 10.



அவாண்மைப் பயன். (62)

ஒவாவென்பவெல்லாவுயிர்க்குமெஞ்ஞான்றும்
விவா அப்பிறப்பீனும்வித்து. ... ... 1.

வேண்டுங்கால்வேண்டும்பிறவாமையமற்றது
வேண்டாமய்வேண்டவரும். ... ... 2.

வேண்டாமயன்னவிழுச்செல்வமீண்டில்லய்
யாண்டுமக்தொப்பதில். ...

... ... 3.

ஆஅய்வீவதென்பதவாவின்மய்மற்றது
வாஅய்மய்வேண்டவரும். ... ... ... 4.

அற்றவரென்பாரவாவற்ருர்மற்றயா

ரற்ருகவற்றதிலர். ... ... ...
... 5.

அஞ்சுவதோருமறனேயொருவனய்
அஞ்சிப்பதோருமவா. ... ... ... 6.

தான்வேண்டியாற்றவறுப்பிற்றவாவினய்
வான்வேண்டுமாற்ருன்வரும். ... ... 7.

அவாவில்லார்க்கில்லாகுந்துன்பமக்துண் டேல்
விவாஅதுமேன்மேல்வரும். ... ... 8.

இன்பமிடயருதீண்டுமவாவென்னுந்
துன்பத்துட்டுன்பங்கெடின். ... ... 9.

ஆரர்வியற்கயவா நீப்பின ந்நிலயே
தாராவியற்கய்தரும். ... ... ... ... 10.

[132]

'இயய்முறய்வற்கு ஈவாண்மயாலாம் பயன்.

(62)

(பயனுளதாக) ஒவ்வாதன வென்பனவாம் (இயய்முறய்வராய்) எல்லாவுயிர்கட்கும் எக்காலத்தும் பகுத்து வேறுபாட்டய்க்கொடுக்கும் மூலமான குணங்கள். ... ... 1.

(இயய்முறய்வர்பயன்) விரும்புங்காலத்து வேண்டுவது (வினய்ஞரய்) வேறுபாடுசெய்யாமய் வேறுபாடாகிய அது விரும்பாப்பண்பய் விரும்பவே வந்துசேரும். ... 2

(இயய்முறய்வர் தமக் (குரியன ஓம்புதலய்) விரும்பாமய யொத்த கெடுசெல்வம் இவ்வுலகத்தில்லய் (அதயன்றி) எவ்விடத்தும்(அந்த)அகத்தீ வின்மயயொப்பது இல்லய். 3.

(இயய்முறய்வர் ஓம்பலய்) ஆய்ந்து (பயன்) தருதிலென்பது (வினய்ஞர்க்குரியவற்றில்) ஆசயின்மயாம் (அதின்) வேருயஇன்மயானது அவரிடத்து பண்பய்விரும்பவேவரும். 4.

(காத்தலிற்றீப்பயன்) அற்றவரெனப் பெறுவார் (வினய்ஞர்க்குரியவற்றில்) ஆசயற்ற இயய்முறய்வரே ஏனயர் அத்தன்மய்த்தாக (தீங்கு) அறுவதிலராவார். ... ... 5.

(இயல்முறையவர்காத்துப்) பயப்படத்தக்கது ஆராய்ந்து செய்யு மறமேயாம் ஒருவனைப் (அயலாருக்கு) அஞ்சச்செய் விப்பது (வேறுபாடு கருதும்) ஆசையேயாம். ... 6.

(இயல்முறையவன் நீத்தலைத்) தானாகவே விரும்பி (வேறு பாட்டைய்) வழியாக அறுத்துவிடுமிடத்துப் (பயன்) கெடா வினையானது உயர்வுவேண்டும், வழியால் தானெவரும். 7.

(வேறுபாட்டில்) ஆசையில்லாத இயல்முறையவருக்கு இல் லயாருக் துன்பங்கள் (நீப்பின்றி அந்த) அசத்தீவுளதேல் வேறுபடாது மேலுமேலும் (துன்பங்கள்) வருவனவாம். 8.

(இயல்முறையவற்கு) இன்பமானது இடைவிடாது வந்து பொருந்தும் (தீயவழிப்பயனுக்கு) ஆசையுறலென்னுந் துன் பங்களிலுயர்ந்த துன்பங்கெடுமிடத்து. ... .... 9.

(இயல்முறையவன்) நிரம்பாத ஆசையைப் (வினைஞர்க்குரிய வற்றில்) நீக்குமிடத்து அந்நிலைப்பொழுதே (பிறவாற்) றொடுக்கமுடியாத வியல்புடைய பயனைத்தரும். ... 10.



ஊழாண்மைப் வகைய். (63)

ஆகூழாற்றோன்றுமசைவின்மைகைப்பொருள்
சோகூழாற்றோன்றுமடி. ... ... ... 1.

ஆதம்படுக்குமிழவூழறிவகற்றுங்
காதலூழுற்றக்கடய். ... ... ... 2.

நுண்ணிய நூல்பலகற்பினுமற்றுந்த
னண்மயறிவேமிகும். ... ... ... 3.

தெள்ளிதுலகத்தியற்கய்திருவேறு
வெள்ளியராதலும்வேறு. ... ... ... 4.

செல்லாமயெல்லா அந்தீயவாந்தீயவுஞ்
செல்லாவாஞ்செல்வஞ்செயற்கு. ... ... 5.

பரியினுமர்காவாம்பாலல்லவுய்த்துப்
புரியினும்போகாதம. ... ... ... 6.

வகுத்தான்வகுத்தவகயல்லாற்கோடி
தொகுத்தார்க்குந்துய்த்தலரிது. ... ... 7.

ஊட்டாதாற்றுப்புரவில்லாருறற்பால
காட்டாகழியுமெனின். ... ... ... 8.

அல்லவய்நல்லவாக்காண்பவரன்றுங்கா
லெல்லய்ப்படுவழிதவன். ... ... ... 9.

எழிற்பெருவலியாவுளமற்றென்று
தாழினுந்தான்முந்துறும். ... ... ... 10.

[134]

இயய்முறய்வர் முயல்வுகொண்டாளும் வகய். (63)

(இயய்முறய்வர்க்கு) ஆகுகின்ற முயற்சியாலுண்டாகும் தம் (தம்நிலய்) அசயாமய் கய்யிலுள்ளபொருளும் சோரவிடு முயற்சியாலுண்டாகும் சோம்பல். ... ... 1.

(இயய் முறய்வர்க்குள்ள) ஆதரவயுங் கெடுத்துவிடும் இழந்த முயற்சியானது அறிவயு நீக்கிவிடும் (வினய்செயாப் பொருட்கு) ஆசய்முயல்வுற்ற கடயிடத்து. ... ... 2.

இயய்முறய்வன் நுட்பமாகிய நூல்கள் பலவற்றய்க்கற்ற விடத்தும் பின்பும் தன்னுட்பொருந்தி நின்ற அறிவே (ஆள்பாக அவனுக்கு) மேற்படும். ... ... ... 3.

(மிகவும்) தெளிந்த தன்மயுடயதுலகத்தியல்பு (ஆள்பு வினய்செய்யுந்) திருவுடயராதலும் வேறாம் (அது இல்லா) வெளிறுடயாராதலும் வேறாம். ... ... ... 4.

(இயய்முறய்வர்க்கு வினயிற்) செல்லாமயெல்லாந் தீயனவாம் அத்தீயனவுஞ்சென்று தடய் செய்யாவாம்(காண்பாற்) செல்வங்களயுண்டாக்கும் வினய்கட்கு. ... ... 5.

காண்புற்ற இயய்முறய்வர்) வருந்தியவிடத்து முண்டாகா வாம் தம்பாலல்லாப்பொருள்கள் செலுத்திப்போகச் செய் தவிடத்தும் போகாவாம் தமதாக்கப் பொருள்கள். ... 6.

(பலவினய்களப்) வருத்துணர்ந்த இயய்முறய்வன் (தேர் வால்) வகுத்த வகயேயல்லாமற் கோடிகோடியாப் (பொரு ளய்த்) திரட்டியவர்க்கும் (வேறுக) அனுபவித்தலரிதாம். 7.

(இயய்முறய்வர்) ஊழ்த்தேர் வாலூட்டாததாலே அனுப விக்கு முணவில்லாதவராவார் பொருந்தற்பால வாய்வினய் கள் காணுமற் கழிந்துபோமென்ற விடத்து. ... ... 8.

அல்லாதவினய்களயும் நல்லவினய்களாகக் காணுமியய் முறய்வர் அல்லாத நல்வினயாகுங் காலத்து (அவர் மகிழ் விற்கு) அளவுண்டாவது எவனிடத்து. ... ... 9.

(இயய் முறய்வர்க்கு) எழுகின்ற ஊழிடத்த வலியினும் பெரியவலி எவயுள்ளன பிறிதொன்று (வரவில்) தாழ்ந்தவி டத்தும் (யயன்றரத்) தானே முன்புவந்தபயும். ... 10.



## ஆள்பியல். (64)

நடய்குடிகூழமய்ச்சுநட்பரணுறு
மடயாளரசருளேறு. ... ...

... 1.

அஞ்சாமயீகயறிவூக்கமிந்நான்கு
மெஞ்சாமய்வேந்தர்க்கியல்பு. . . .
... 2.

தூங்காமய்கல்விதுணிவுடய்மயிம்மூன்றும்
நீங்காநிலனாள்பவர்க்கு. ... ... ... 3.

மானமார்ந்தல்லவய்நீக்கிமறனிழுக்கா
வூனமுடயதரசு. ... ... ... ... 4.

இருத்தலுமீட்டலுங்காத்தலுங்காத்த
வகுத்தலும்வல்லதரசு. ... ... ... 5.

காட்சிக்கெளியன்கடுஞ்சொல்லனல்லனேன்
மாட்சியம்மன்னனிலம். ... ... ... 6.

தான்கணுலீத்தளிக்கவல்லாற்குத்தன்சொலா
லூன்கண்டனய்த்திவ்வுலகு. ... ... 7.

கறய்செய்துகாப்பாற்றுமன்னவன்மக்கண்
மறயென்றுவய்க்கப்படும். ... ... ... 8.

சுவய்கய்ப்பச்சொற்பொறுக்கும்பண்புடய்வேந்த

னுவகய்க்கீழ்த்தங்குமுலகு. ... ... 9.

கொடயளிசெங்கோல்குடியோம்பனென்கு
முடயனும்வேந்தர்க்கொளி. ... ... ... 10.

[136]

ஊழாளரது ஆளுந்தன்மய். (64)

(யாவரும் விரும்பும்) நடயுங் குடிமயும் பொருளும் அமய்வும் நட்பும் காவலுமாகிய ஆறுமடய்ந்த ஆள்புடய ஊழாளனே தலய்மயுற்றோருள்ளிடத்துப் புருடரோருவான். 1.

(ஆள்பிற்கு) வெருவாமயும் கொடயும் விவேகமும் மனவெழுச்சியுமாகிய இந்நான்குங் குறய்வுபடாமய் (ஈவாளரால்) விரும்பப்பெறும் ஊழாளர்க்கியல்பாம். ... 2.

(வினயாற்றலிற்) சோராம்யும் கல்வியும் துணிவுடய்மயுமாகிய இம்மூன்றுவித அறிவும் நீங்காவாம் (தமதுரிய) நிலத்தய் (இடய்விடாது) ஆளுமூழாளர்க்கு. ... ... 3.

பெருமய்ப்பண்பால் நிறய்ந்து அதயல்லாதவய்களயொழித்து வீரத்தில் நின்றும் நீங்காத உறுதியறிவுடயதே (ஊழாளர் வினய்மய்க்கு) அரசாம். ... ... ... 4.

(உரியபொருளை) வருவித்தலும் (அதை) ஒன்முகச்சேர்த்தலும் (பிறர்கவராது) காத்தலும் காத்தபொருளை வகுப்பிடுதலும்(புலத்தால்)வல்லதே (ஊழாளர்க்கு) அரசாம். 5.

தோற்றத்திற் கெளியவனுகிக் கடியுஞ்சொல்லுடையானல்லனென்ருல் மாட்சிமையுடையதாம் அந்தப் புலநிலையுடைய ஊழாளன் (ஆள்புற்ற) இடம். ... ... ... ... 6.

தானுகவே செவியிடத்தால் (ஈவாளர்க்கு வினைப்பயன்) கொடுத்துக் காக்கவல்ல ஊழாளர்க்குத் தன் சொல்லாலே உறுதிகண்ட தன்மையதாம் (அவனுள்புற்ற) உலகம். ... 7.

(செவியாள் பிற்குக்) குற்றமாகிய வினைகளைச் செய்து (அவைகளையே) காவல்செய்யும் நிலையுடைய ஊழாளனை மனுடருக்குள் மறுக்கமுளனென்று வைக்கு மியல்புறும். 8.

சுவையிற் கைப்பனவாய சொற்களைப் பொறுத்துக்கொள்ளும் பண்புடைய (ஆள்பால்) விரும்பப்பெறு மூழாளனது மகிழ்விற்குக் கீழேதங்கி நிற்கு மிந்த உலகம். ... 9.

(வினைக்) கொடையும் (தலைவனில்) அன்பும் செவ்விய கோற்றன்மையுங் கூடிவாழ்வோம்பலுமாகிய நான்குமுடைய ஊழாளனேயாம் விரும்பப்பெறுமாள்பினருள் விளக்கு.10.



அறிவுடைமை. (65)

**கற்ககசடறக்கற்பவைகற்றபின்**

அற்கவதற்குத்தக. ... ... ...

... 1. எண்ணென்ப

வேனயெழுத்தென்பவிவ்விரண்டு
மொண்ணென்பவாழுமுயிர்க்கு. ...

... 2.

கண்ணுடயாரென்பவர்கற்றோர்முகத்திரண்டு
கண்ணடயார்கல்லாதவர். ... ... ... 3.

உவப்பத்தலய்க்கூடியுள்ளப்பிரிதல்
புவிக்கட்புலவர்தொழில். ... ... ... 4.

இடயார்முனில்லார்போலேக்கற்றுங்கற்றூர்
கடயரோகல்லாதவர். ... ... ... 5.

வற்றனய்த்தூறுமணற்கேணிமாந்தர்க்கு
முற்றனய்த்தூறுமறிவு. ... ... ... 6.

யாதானுநாடாமாலூராமாலென்னொருவ
ஞதிநால்கல்லாதவாறு. ... ... ... 7.

ஒருமைக்கட்டான்கற்றகல்வியொருவற்
கிருமையுமேமாப்புடைத்து. ... ... ... 8.

ஓமின்புறுவதுலகின்புறக்கண்டு
காமுறுவர்கற்றறிந்தார். ... ... ... 9.

வீடில்விழுச்செல்வங்கல்வியொருவற்கு
மாடல்லமற்றயவை. ... ... ... 10.

[138]

ஆள்வினர் அறிவுடையராதல். (65)

(ஆள்வினர்) கற்கக்கடவர் குற்றமறும்படி கற்கப்பால தாய வினைகளை (அவற்றைக்) கற்றபின்பு நிற்கக்கடவர் அவ்வினைக் கல்விக்குத் தக்கபடி. ... ... ... 1.

(ஆள்வினைப்பயனை) எண்ணும் பண்பென்பனவும் பிற வாக (வினைப்புரியும்) எழுதற் பண்பென்பனவுமாய இந்த இரண்டும் ஒளி என்பனவாம் (வினையில்) வாழுமுயிர்க்கு. 2.

கண்களுடையாரென்று சொல்லப்பெறுபவர் (வினைத்திறங்) கற்ற ஆள்வினரோயாம் முகத்திரண்டு கண்களுமடையா தவராவார் (அது) கற்காத பிறர். ... ... ... 3.

(மனம்) மகிழும்படி (வினய்) இடத்துக்கூடுதல் செய்து (ஒருவர்வினய் நலத்தய் ஒருவர்) நினய்க்கும்படி பிரிதலே உலகின்கண் அறிவுடய ஆள்பினரது தொழிலாம். ... 4.

(பொருள் தம்) இடத்துடயார் முன்பு (இரந்து நிற்கும்) வறியார்போல ஏங்கிநின்றும் (வினய்) கற்ற ஆள்பினருக்குக் கடயரேயாவார் (அவ்வாறு) கற்காத பிறர். ... ... 5.

வற்றவிறய்த்துத் (தோண்டிய) அவ்வளவர்யூறும் மண வின்கட்கேணி (ஆள்பினராய) மனுடர்க்கும் (வினய்கற்கப்) பொருந்திய அளவிலூறுவதாகும் அறிவு. ... ... 6.

எந்த நாடேனும் (சொந்த) நாடாமாதலாலும் எந்த ஆரேனும் (சொந்த) ஊராமாதலாலும் என்னய் ஒரு ஆள்பின ன் (வினயுணர்த்தும்) முதனூலய்க் கற்காதவிதம். ... 7.

ஒருமயான இடத்திற்றன் கற்ற (வினய்க்) கல்வியானது (ஆள்பினனுய) ஒருவனுக்கு (ஈவு ஊழ் என்னு) இருமயி டத்துங் காவலாங் தன்மயுடயதாம். ... ... ... 8.

உடன்பாடுடய தாமின்புறுவது (போலவே) உலகுமி மின்பமுறுவதய்க் கண்டு விருப்பமடய்வார் (வினய்) கற்ற றிந்த ஆள்பினர். ... ... ... ... ... 9.

(எக்காலத்தும்) விட்டு நீங்காத பெரிய செல்வமாவது (வினய்க்) கல்வியாம் (ஆள்பினனுய) ஒருவனுக்குச் செல்வ மில்லவாம் ஏனயபொருள்கள். ... ... ... 10.

மாலின்றிவட்டாடியற்றேறிரம்பிய
கோலின்றிக்கோட்டிகொளல். ... ... 1.

ஒல்லாதான்சொற்காமுறுதன்முலயிரண்டு
மல்லாதாள்பெண்காமுற்றற்று. ... ... 2.

கல்லாதவருநனிநல்லார்கற்றூர்மு
னெல்லாதிருக்கப்பெறின். ... ... ... 3.

கல்லாதாளுெட்பங்கழிய நன்றூயினு
மல்லாரறிவுடயார். ... ... ... ... 4.

ஒல்லாவொருவன்றகய்மய்தலய்ப்பெய்து
சொல்லாடச்சோர்வுபடும். ... ... 5.

வளரொன்னுமாத்திரயரல்லாற்பயவாக்
களரனயர்கல்லாதவர். ... ... ... 6.

நுண்மாணுழைப்புலமில்லானெழினல
மண்மாண்புனய்பாவயற்று. ... ... 7.

வல்லார்கட்பட்டவறுமயினின்ஞதே
செல்லார்கட்பட்டதிரு. ... ... ... 8.

கற்ளுர்கேளாயினுங்கல்லாதார்கீழ்ப்பிறந்தும்
பற்ளுரனய்த்திலர்பாடு. ... ... ... 9.

மற்ருயமக்களனயரிலங்குநா
லெற்ருரோடேனயவர். ... ... ... 10.

[140]

## ஆள்பினர் புலநல முடயராதல். (66)

வகுப்பிடமின்றிச்சூதாடு மத்தன்மயதேயாம் ஆள்பினர் (உட்புலத்து வினய்த்திறம்) நிறய்ந்த அளவின்றி (வினய்ஞர்) சபயினுட் கொண்டிருத்தல். ... ... ... 1.

(புலவினய்) பொருந்தாத ஆள்பினன் (வினய்) சொல்லுதற்கு விரும்புதல் முலய்களிரண்டு மன்மயளாய ஒருத்தி (மகவூட்டற்குப்) பெண்காமுற்ற தன்மய்த்தாம். ... 2.

(நிறய்ந்தவினய்) கல்லாதவர்களும் மிக நல்லவராவார் (அது) கற்ற ஆள்பினர் முன்பு விளக்கஞ்செய்யாது (மறய்ந்து) இருக்கும்படியான (புலம்) பெறுமிடத்து. ... 3.

(வினய்நூல்) கற்காத ஆள்பினனது ஒண்மய் (பிறர் ஒண்மயெல்லாஞ் சிறிதெனக்) கழியும்படி பெரிய நன்மயான விடத்து மல்லாரோயாம் அறிவுடயாராதல். ... ... 4.

(வினய்ப்புலம்) பொருந்தாத (ஆள்பினனுய ஒருவன் பெருமயானது இடந்தந்து சொல்லப்புகவே (எக்காலத்து மீடேறுத) சோர்வயடயும். ... ... ... ... 5.

(செல்வங்களெல்லா மிருந்தாலும்) வளமுடயாரொன்று கூறுஞ் சொல்லளவினரோ யன்றிப் பயன்படாத களர்நிலத்தோ டொப்பார் (வினய்) கல்லாத ஆள்பினர். ... 6.

நுட்பமான (வினயியற்றும்) மாண்புபுகும் புலங்கள் இல்லாத ஆள்பினன் அழகும் நலமும் பொருந்துகின்ற மாண்பாக அணிந்து வய்த்த பாவய்த் தன்மயாம். ... ... 7.

(வினயில்) வல்ல புலமுடய ஆள்பினரிடத்துண்டாகிய மறுமயினுந் துன்பமுடயதேயாம் (அவ்வின்யிற்) செல்லாத பிறரிடத்துண்டாகிய செல்வமானது. ... ... 8.

(வினயெல்லாங்) கற்ற புலமுடயார் கேண்மயரான விடத்துங் கற்காதவர் கீழாய நிலயிற் பிறந்தும் (அவ்வினய்ப்) பற்றுடயாரவ்வளவில்லாராவார் (ஆள்புலப்) பெருமய். 9.

வேறு வடிவத்தாலாகிய மனுடரோ போல்வர் (வினய்) விளங்கு நூற்புலத்தய் விடாத ஆள்பினரோடு (அப்புல நலம் பெறுத) மற்றயோர். ... ... ... ... 10.

செவி யுடைமை. (67)

செல்வத்துட்செல்வஞ்செவிச்செல்வமச்செல்வ
மெல்வற்றுளெல்லாந்தலை. ... ... 1.

செவிக்குணவில்லாதபோழ்துசிறிது
மெவற்றினலீயப்படும். ... ...

... 2.

ஒன்றுணவிற்கேள்வியுடையாரவியுணவி
னின்றுரோடொப்பர்நிலத்து.

... ... 3.

அற்கிலனுயினுங்கேட்கவக்தொருவற்

கொற்கத்தினூற்றாந்துணய். ... ... 4.

அழுக்கலுடயுழியூற்றுக்கோலற்றே
ஒழுக்கமுடயார்வாய்ச்சொல். ... ... 5.

ஆன்றுளநல்லவய்கேட்கவனய்த்தானுஞ்
சான்றபெருமய்தரும். ... ... ... 6.

ஈண்டியபேதமய்சொல்லாரிழய்த்துணர்ந்
தாண்டியர்கேள்வியவர். ... ... ... 7.

கேட்பினுங்கேளாத்தகயவேகேள்வியாற்
றேட்கப்படாதசெவி. ... ... ... 8.

வாயினகேள்விய்ரல்லார்வணங்கிய
ராயினராதலரிது. ... ... ... ... 9.

சுவயுட்சுவயுணராவாயுணர்வின்மாக்க
ளெவர்வயின்வாழினுமென். ... ... 10.



---

ஆள்பினர் கேள்வியுடயாரதல். (67)

(ஆள்பினருக்குச்) செல்வமென்பவற்றுளெல்லாஞ் (சிறந்த) செல்வமாவது கேள்விச்செல்வமாம் அந்தச் செல்வம் விளங்கும் வழியவற்றுளெல்லாம் மேலதாம். ... 1.

(ஆள்பினர்) செவிகட்குக் (கேள்வியாகிய) உணவு இல்லாதபொழுது (வினய்த்திறமுணரும் அறிவு) சிறிதாவதும் (வேறு) எவற்றுற் கொடுத்தலுண்டாம். ... ... 2.

(வினய் நலம்) பொருந்துமுட்கோளிடத்துக் கேள்வியுடய ஆள்பினர் அமுதவுணவிடத்து நிலய்பெற்ற மேலவரோடு ஒப்பவார் நிலவுலகில். ... ... ... 3.

(வினய்நூல் கற்கும்) நிலயில்லானுய விடத்தும் (கற்ருர்பாற்) கேட்கக்கடவன் (அந்த) அகச்செவி ஒருஆள்பினனுக்குத் தளர்வுற்ற விடத்துப் பற்றுக்கோடாய துணயாம். 4.

அச்சந்தரும் (வழுக்கு) உடய நிலத்தின்கண் (ஆதரவாயுதவும்) ஊன்று கோற்றன்மயதாம் (ஆள்பினருக்கு வினய்) ஒழுக்க முடயாரது வாயிற்பிறக்கும் சொற்கள். ... 5.

(ஆள்பினர் வினய்) விரிந்துள்ள நல்ல சொற்களய்க் கேட்கக்கடவர் அவ்வளவினுலும் (பயன்) நிறய்ந்த பெருமயய்க் கொடுக்கும். ... ... ... ... ... ... 6.

(பயனின்மய்) செறிந்த மடமய்ச்சொற்களய்ச் சொல்லார் (வினய்களய்ச்) செய்து (அதன்பயன்) உணர்ந்து ஆள்புகொண்டுயர்ந்த கேள்வியுடயோர். ... ... ... 7.

(ஓசய்) கேட்கு மியல்புடய விடத்துஞ் செவிடாந் தன்மயுடயனவேயாம் (வினயுணரும்) கேள்வியாலே தெளிவு செய்யப்பெருத ஆள்பினர் செவிகள். ... ... 8.

(வினயாற்றற் பயன்) தன்னிடத்ததாகிய கேள்வியுடயா ரல்லாத ஆள்பினர் (தலய்வர் மாட்டு) வணங்கி நடக்குந் தன்மயராகுதல் (எக்காலத்தும்) இல்லய். ... ... 9.

சுவயுருவாகிய (சொல்லின்) உள் (வினய்ப்பயனய) சுவயய் அறியாமல் அதற்கிடமான சொல்லயுணரு மிடமுடய மரிந்தா் எவ்வகயோரிடத்து வாழினு மென்னய். ... 10.

[143]

காண்பியல். (68)

தெள்ளறிவுகாக்குங்கருவிசெருவார்க்கு
மள்ளழிக்கலாகாவரண். ... ... ... 1.

சென்றவிடத்தாற்செலவிடாதீதொரீஇ
யொன்றற்பாலுய்ப்பதறிவு.

... ... 2.

எய்ப்பொருள்யார்யார்வாய்க்கேட்பினுமப்பொருட்
கய்ப்பொருள்காண்பதறிவு. ... ... 3.

திண்பொருளவாகச்செலச்சொல்லித்தான்பிறர்வா
யண்பொருள்காண்பதறிவு. ... ... 4.

ஓம்பறழீஇயதொட்பமலர்தலு
மேம்பலுமில்லதறிவு. ... ... ... 5.

ஒவ்வெதுறய்வதுலகமுலகத்தோ
டவ்வதுறய்வதறிவு. ... ... ... ... 6.

அக்துளாராவதறிவாரறிவிலா
ரக்தறிகல்லாதவர். ... ... ... ... 7.

அஞ்சுவதஞ்சாமய்பேதய்மயஞ்சுவ
தஞ்சலறிவார்தொழில். .. ... ... 8.

எதிரதாய்க்காக்குமறிவிஞர்க்கில்லய்
நொதுமல்வருவதோர்நோய். ... ... 9.

உன்னுடயாரொல்லாமுடயாரறிவிலா
ரொன்னுடயரேனுமிலர். ... ... ... 10.

[144]

ஊழாளரது காணற்றன்மய். (68)

(ஊழாளருக்கு வினய்காணுங்) தெள்ளிய அறிவாகிய பாதுகாக்குங்கருவி (உளதாயின்) பகய்வருக்கும் அடுத்தழித்தல் கூடாத அரணும். ... ... ... ... 1.

(ஊழாளர் மனஞ்) சென்றவிடத்தாலெல்லாஞ் செல்லவிடாமல் தீமய்பயப்பதயொழித்து (நன்மய்) பொருந்துமிடத்தய்க் (கண்டு அதிற்) செலுத்துவதே அறிவாம். ... 2.

(ஊழாளர்) பொருந்திய பொருளுரய்களய் யாவர் யாவர் வாயாற் கேட்டவிடத்தும் அந்தப் பொருள்களுள் (பெருக்கிற்கு) இடமான பொருள்களய்க் காண்பதே அறிவாம். 3.

(ஊழாளன்) திண்ணிய பொருளுள்ளனவாகக் (கேட்பவருள்ளத்திற்) செல்லும்படி கூறித் தான்பிறரிடத்தும் (பெருக்கம்) பொருந்தும் பொருளய்க் காண்பதே யறிவாம். 4.

(ஊழாளர் தமராவாரய்த் தேர்ந்து) ஓம்புதலய்த் தழுவியதே ஒண்மயாம் (அது ஒருகால்) விரிதலும் (ஒருகாற்) சுருங்கலும் இல்லாததே (காட்சி) அறிவாம். ... ... 5.

ஒப்பி எதன்கண்ணே யுறய்கின்றது உலகம் அந்த உலகத்தோடு அந்த விதமாகவே (ஊழாளர் தமர்களோடு) பொருந்தியிருப்பதே அறிவாம். ... ... ... ... 6.

அகக்காண்புடய ஊழாளர் (தமக்கினம்) ஆகும்வினயய் அறிபவராவார் அவ்வறிவில்லாதவராவார் (அந்த) அகக்காண்பய் அறிதலல்லாதவர். ... ... ... 7.

அஞ்சத்தக்க வினயில் அஞ்சாதிருக்கும் பண்பானது மடமயாம் அஞ்சி நடக்கும் வினயில் அஞ்சி நடத்தல் (இனம்) அறியு மூழாளரது தொழிலாம். ... ... 8.

(ஒரு துன்பம்) வருதற்கு முன்னுகவே (கண்டு அது வராவண்ணங்) காக்கின்ற அறிவிடமுடைய ஊழாளர்க்கில் லயாம் வருத்தமுண்டாவதாகிய ஒரு துன்பம். ... 9.

(வினய் நலங்காணும்) உள்ளறிவுடைய ஊழாளரே எல்லா நலங்களுமுடையராவார் அவ்வறிவில்லாதவர் (வேறு) என்ன செல்வமுடையாராலும் வறியாராம். ... ... 10.



பெருக்குடய்மய். (69)

செருக்குஞ்சினமுஞ்சிறுமயுமில்லார்
பெருக்கம்பெருமிதநீர்த்து. ... ... ... 1.

வ்வ லுமாண்பிறந்தமானமுமாணு
வெவ்வமுமேதமிறய்க்கு. ... ... ... 2.

கொள்ளாரெட்குற்றம்வரினும்பனய்த்துணயாப்
பள்ளும்பழிநாணுவார். ... ... ... 3.

குற்றமேகாக்கப்பொருளாகக்குற்றமே
தற்றந்தரூஉம்பகய். ... ... ... 4.

வய்த்தூறுகாவாதான்வாழ்க்கயெரிமுன்னர்ப்

பொய்த்தூறுபோலக்கெடும். ... ... 5.

பின்குற்றநீக்கிப்பிறர்குற்றங்காண்கிற்பி
னென்குற்றமாகுமிறய்க்கு. ... ... ... 6.

செயற்பாலசெய்யாதிவறியான்செல்வ
மயற்பாலதன்றிக்கெடும். ... ... ... 7.

எண்ணுள்ளமென்னுமிவறன்மயெற்றுள்ளு
மண்ணப்படுவதொன்றன்று. ... ... 8.

நன்றுறவெஞ்ஞான்றுந்தன்னய்நயவற்க
வென்றிபயவாவினய். ... ... ... 9.

காதலகாதலறியாமயுய்க்கிற்பி
னேதிலவேதிலார்நூல். ... ... ... 10.

[146]

காண்பினர் பெருக்குடயராதல். (69)

(யான் எனது என்றெழும்) அகங்காரமும் கோபமும் அற்பத்தன்மயுமில்லாத காண்பினரதுபெருக்கமே (பயனுற்) பெருமயான இத குணமுடயதாம். ... ... ... 1.

(பிறர் பொருளய்க்) கவர்தலும் நன்மய் கடந்த மான மும் மாட்சிமயப்படாத துக்கமுமாகிய இவய் குற்றமாம் (பெருக்கால்) தலயமப்பூண்ட காண்பினற்கு. ... 2.

தம்முட்குற்றம்) பெருத காண்பினர் (தம்வினய்களில்) எள்ளளவு குற்றம் வந்த விடத்தும் பனயளவாகத் தாழ்த் தும்பழி (வந்ததாக நினய்ந்து) வெள்குவார். ... 3.

(காண்பினர்) குற்றம் படுவினய்களயே (தம்பால் வரர்மற்) காக்கக் கடவர்(பெருகு)பொருளாக அக்குற்றம் படுவினயே (பிறராற்) பந்தித்தல் தரும்பகயாம் (ஆதலால்). ... 4.

(பெருகும் வினயிற் சிந்தய்) வய்த்து (இடயில்வரும்) ஊ றுபாடுகளய்க் காவல் செய்யாத காண்பினன் வாழ்க்கயான து தீயின் முற்பட்ட பொக்குத்தூறுபோற் கரிந்துபோம்.5.

(தன்னய்ப்) பற்றிய குற்றமொழித்து அயலாரது குற்றங் காணும் வலியுடயனய விடத்து என்னெனப்படுங் குற்றமு ண்டாம் (பெருக்கால்) தலய்மய் பூண்டகாண்பினற்கு. 6.

(பெருகச்) செய்யற்பாலனவாய வினய்களய்ச் செய்யா மல் மறப்புற்ற காண்பினன் செல்வமானது அயற்பால் வினயுமல்லாமற் கெட்டொழியும். ... ... ... 7.

(காண்பினருக்குப் பெருக்கந்தரும் வினய்களய்) நினயு முள்ளுமென்கின்ற மறப்பின்மயானது எத்தன்மய்த்தான குற்றத்துள்ளும் பொருந்தப் படுவதொன்றன்றும். ... 8.

(காண்பினன்) நன்மய்பெருக எக்காலத்துந் தனக்குரிய அழகாக விரும்பாதொழிக வெற்றியய்க் கொடாத (வீண்) செயல்களய். ... ... ... ... ... 9.

(காண்பினர்பெருக்கமாக) விரும்பிய பொருள்களயும் விருப்பத்தயும் (பிறர்) அறியாப் பண்புகளாற் செலுத்துமிடத்து ஏது இல்லனவாம் பகய்வரது எண்ணங்கள். ... 10.

[147]

## தமருடய்மய். (70)

அற்னறிந்துமூத்தவறிவுடயார்கேண்மய்
திறனறிந்துதேர்ந்துகொளல். ... ... 1.

உற்றநோய்நீக்கியுறுஅமய்முற்காக்கும்
பெற்றியார்ப்பேணிக்கொளல். ... ... 2.

பேண்வற்றுளெல்லாமரிதேபெரியாரய்க்
கோணித்தமராக்கொளல். ... ... 3.

தம்மிற்பெரியார்தமராவொழுகுத
லிம்மயுளெல்லாந்தலய். ... ... ... 4.

வாழ்வார்கண்ணாக்வொழுகலான்மன்னவன்
சூழ்வாரய்ச்சூழ்ந்துகொளல். ... ... 5.

தக்காரினத்தனாய்த்தானொழுகவல்லானய்
சிக்கார்செயக்கிடந்ததில். ... ... ... 6.

இடிக்குந்துணயாரயாள்வாரயாரே
தடுக்குந்தகய்மயவர். ... ... ... 7.

இடிப்பாரயில்லாதவேமராமன்னன்
கெடுப்பாரிலானுங்கெடும். ... ... ... 8.

ஓர்விலார்க்கூதியமில்லய்மதலயா
மோர்பிலார்க்கில்லய்நிலய். ... ... ... 9.

பல்லார்பகய்கொளலிற்பத்தடுத்ததீமய்த்தே
தொல்லார்தொடர்க்கய்விடல். ... ... 10.



காண்பினர் தம்ருட்யராதல். (70)

(காண்பினர்) அறஞ்செய்தலய்றிந்து முதிர்ந்த அறிவுடயாரய்த் தமராகச் செய்யுந்தன்மய்யறிந்து தெளிந்து (பற்றுக்கோடாகக்) கொள்ளுதல் வேண்டும். ... ... 1.

(காண்பினர் தம்பாற்) பொருந்திய துன்பங்களய்ப் போக்கிப் (பின்பவய்) வராதவிதமாக முற்படக்காக்குந் தன்மயுடயாரய்த் (தமராகப்) பேணிக்கொள்ளுதல் வேண்டும். 2.

(காண்பினர்) பேணத்தக்கவய்களுளெல்லாம் அருமயேயாமென்று (வினயிற்) பெரியோரய்ப் (பணிவாய்) வளய்ந்து தமராகக்கொள்ளுதல் வேண்டும். ... ... 3.

(காண்பினர்) தம்மிடத்த (வினயாற்) பெரியோரய்த்தமராகக்கொண்டு நடத்தல் இம்மயில் தாம் (செய்யும் வினயுள்) எல்லாம் தலய்மயுடயதாம். ... ... ... 4.

(தன்வினயுடன் கலந்து) வாழ்பவரய்க் கண்ணுக்கொண்டு நடக்கவேண்டுமாதலால் நிலய்த்த காண்பினன் ஆய்பவரய் ஆய்ந்துகொள்ளுதல் வேண்டும். .... ... 5.

(வினயால்) தகுதியுடயோரய்த் (தனக்குத்) தமராயினுய்த் தான் நடக்கவல்ல காண்பினனய்ப் பகய்வர் (கேடு) செய்யக்கிடந்த தொன்றுமில்லய். ... ... ... 6.

(தவறுகண்ட விடத்து) இடித்துப் (புத்தி கூறுந்) துணயாவாரய் ஆளுங்காண்பினரய் எவரோ (வினயால்) தடுக்குந் தகுதியுடயராவார். ... ... ... ... 7.

(தவறுகண்ட விடத்து) இடித்துப் (புத்தி) கூறுவாரய்த் (தமராக) இல்லாத காவலற்று மன்னிய காண்பினன் (வாழ்வு) கெடுப்பவரில்லாமலுங் கெட்டுவிடும். ... ... 8

(முதலய்) ஆய்ந்தறியாத வர்த்தகர்க்கு இலாபமில்லய் (அதுபோற் றமர் என்னும்) மரக்கலமாகிய அழகில்லாத காண்பினருக்கு இல்லயாம் (வினய்க்கடலில்) நிலய். 9.

(காண்பினர்) பலரோடு பகய்கொள்ளுமிடத்து (உண்டாகுந்தீமயினும்) பத்துமடங் கதிக்மான தீமயுடயதேயாம் (வினயிற்)பழமயான அறிவுடயாரதுதொடர்பய்விடுதல்.10.



## இன முடய்மய். (71)

சிற்றினமஞ்சும்பெருமய்சிறுமய்தான்
சுற்றமாச்சூழ்ந்துவிடும். ... ... ... 1.

நிலத்தியல்பானீர்திரிந்தற்றாகுமாந்தர்க்
கலத்தியல்பதாகுமறிவு. ... ... ... 2.

உன்னுமாந்தர்க்குணர்ச்சியினத்தானு
மின்னானெனப்படுஞ்சொல். ... ... 3.

உனத்துளதுபோலக்காட்டியொருவற்
கனத்துளதாகுமறிவு. ... ... ... 4.

இனந்தூய்மய்செய்வினய்தூய்மயிரண்டு

மனந்தூய்மய் தூவாவரும். ... ... ... 5.

இல்லின்றாய்தெச்சநன்றாகுமினந்தூயார்க்
கல்லநன்றாகாவினய். ... ... ... 6.

வல்லரான்மன்னுயிர்க்காக்கமினநலம்
புல்லாப்புகழ்ந்தரும். ... ... ... 7.

தனநலநன்குடயராயினுஞ்சான்றோர்க்
கினநலமேமாப்புடய்த்து. ... ... ... 8.

மனநலத்தினாகுமறுமய்மற்றக்து
மினநலத்தினேமாப்புடய்த்து. ... ... 9.

தொல்லினத்தினூங்குதுணயில்லய்தீயினத்தி
னில்லற்படுப்பதூஉமில். ... ... ... 10.

[150]

காண்பினர் இனமுடயராதல். (71)

சிற்றறிவுக் கூட்டத்தய்ச் (சேரப்) பயப்படுங் (காண்பின ராய) பேரறிவுக் கூட்டம் சிற்றறிவுக் கூட்டம் தானகவே சுற்றமாக வளய்ந்து (பேரறிவய்) விட்டுவிடும். ... 1.

பூமியின் பண்பால் (அதைச்சேர்ந்த) நீரானது (தன்றன்மை) வேறுபட்டு அப்பூமியின் றன்மைத் தாம் (அதுபோற் காண்புறு) மாந்தர்க்கு இனத்தளவியற்கையதாகு மறிவு. 2.

உள்ளறிவா லுண்டாகும் (காண்புறு) மனுடர்க்கு (வினையாற்றும்) உயர்வானது (சார்ந்த) இனத்தா லுண்டாகும் (இவன்) இப்படிப்பட்டவ னெனப்படுஞ் சொல்லானது. 3

(வினையாற்றல்) மனத்தின்கண் உள்ளதுபோலக்காட்டி (காண்பினனாய) ஒருவனுக்கு (இனச்சார்பெவ்வளவோ) அவ்வளவே உள்ளதாகும் அறிவானது. ... .. 4.

(காண்பினருக்கு) இனந்தூய்மையாதலும் செய்கின்ற வினைத் தூய்மையாதலுமாகிய இரண்டும் மனத்தினது தூய்மையயே ஆதரவாக்கொண்டுவரும். ... ... ... 5.

(ஒருவர்க்கு) இல்லிடத்துள்ள தூய்மையாற் சந்ததிக்கு நன்மையுண்டாகும் இனத்தூய்மையுடைய காண்பினருக்கு அல்லனவாகும் நன்மையுண்டாகாத செயல்கள். .... ... 6.

(வினையால்) வலிமையுடையாரால் (அவர்பால்) மன்னிய உயிர்கட்கு ஆக்கமாம் (காண்பினருக்கு) இன நன்மையானது (பிறவாற்) பொருந்தாத கீர்த்திமுழுவதையுந் தரும். ... 7.

பொருள் நன்மைகள் நன்றாக உண்டாயி னாராயவிடத்தும் நிறைவுடைய காண்பினருக்கு இனமாகிய நலமே இன்பம் வளர்ந்துகொள்ளுந் தன்மையுடையதாம். ... ... ... 8.

(காண்பினருக்கு) மன நன்மையிடத்தா லுண்டாகும் மறுமையின்பம் வேறாய (அந்த) அகவின்பமும் (சார்ந்த) இனநலத்தினை வின்பம் வளர்ந்துகொள்ளுந் தன்மையுடையதாம். 9.

(காண்பினருக்கு) பழமயான இனமாஞேரிடத்தினு மே லானதுணயில்லய் தீயகூட்டத்தாரிடத்தினும் (மேலான) துன்பத்தயுண்டாக்குவதும் இல்லய். ... ... 10.

[151]

தேர்வியல். (72)

ஆதமுமாவதூஉமாகிவழிபயக்குஞ்
சேதனர்ச்சூழ்ந்துசெயல். ... ... ... 1.

தெரிந்தவினத்தொடுதேர்ந்தெண்ணிச்செய்வார்க்
கிரும்பொருள்யாதொன்றுமில். ... ... 2.

தேக்கங்கருதிமுதலிழக்குஞ்செய்வின
யாக்காரறிவுடயார். ... ... ...

... 3.

ஏதமெதனய்த்தொடங்காரிளிவென்னு
மாதப்பாடஞ்சுபவர். ... ... ... 4.

ஏத்துறச்சூழாதெழுதல்பகய்வரய்ப்
பாத்திப்படுப்பதோராறு. ... ... ... 5.

செய்தக்கவல்லசெயக்கெடுஞ்செய்தக்க
வய்யாமயானுங்கெடும். ... ... ... 6.

கண்ணித்துணிககருமந்துணிந்தபி
னெண்ணுவமென்பதிழுக்கு. ... ... 7.

ஆற்றின்வருந்தாவருத்தம்பலர்நின்று
போற்றினும்பொத்துப்படும். ... ... 8.

ஒன்றூற்றலுள்ளுந்தவறுண்டவரவர்க்
கன்றறிந்தாற்றூக்கடய். ... ... ... 9.

எள்ளாதவெண்ணிச்செயல்வேண்டுந்தம்மொடு
கொள்ளாதகொள்ளாதுலகு. ... ... 10.

[152]

ஊழாளரது தேர்தற்றன்மய். (72)

(ஊழாளர் ஒருவினைச் செய்யுமிடத்து) ஆதரவும் உண்டாகு மிலாபமுமாகி வழிவழியாகப் பயன்செய்கின்ற அறிவினரோடு தேர்வுற்றுச் செய்தல் வேண்டும். ... 1.

(வினையாற்றல்) தெரிந்த இனத்தாருடனே தேர்வுற்றுப் (பின்புதாமுந்) கருதிச்செய்யு மூழாளர்க்குக் (கைகூடாத) பெரியபொருள் யாதொன்றுமில்லை. ... ... 2.

(பொருள்பெருகி) நிறைதலை நினைந்து (முன்புள்ள) முதலுமிழந்துவிடுஞ் செய்தொழிலைச் செய்யார் (வினைவலிபெற்ற) அறிவுடைய ஊழாளர். ... ... ... 3.

(தமக்குக்) குற்றமுண்டாகும் அவ்வினையைத் தொடங்குதல் செய்யார் (வலிமைக்கு) இளிவென்கிற ஆதரவுப்பெருமைக்குப் பயப்படு மூழாளர். ... , ... ... 4.

(பொழுதுடையார்) புகழும்படியாக (ஊழாளர்) தேராது (ஒருவினைச்செயற்கு) எழுதலானது பகைவரைத் (தம்) பங்கிற் சேர்ப்பதாகிய ஒருவழியாம். ... ... ... 5.

(உழாளர் பொழுது தேர்ந்து) செய்யத்தக்கன அல்லாதவற்றைச்செய்யப் (பயன்) கெடும் செய்யத்தக்கவைகள் (அவ்வாறு செய்து) விளங்காமையாலுங்கெடும். ... ... 6.

ஊழாளர் வினையாற்றுமிடத்தைத் தேர்வாக) நினைந்து துணியக்கடவர் வினையில் (அவ்வாறு) துணிவுற்றபின்பு தேர்வு கொள்ளுவோ மென்பது இழுக்கமாம். ... 7.

(இடந்தேரும்) வழியிடத்து நின்று (ஊழாளர்) வருந்தாதவருத்தமானது பலபேர் நின்று பாதுகாக்குமிடத்தும் புரைப்பட்டு (முடிவுறாது) ஒழியும். ... . ... ... 8.

(ஊழாளர்) ஒரேதன்மயான நன்மயே செய்தலுள்ளுந் தவறுண்டாம் அவரவர்கட்கு அவ்வக்காலமறிந்து (அவ்வவ் வினய்களய்ச்) செய்யாத இடத்து. ... ... ... 9.

(ஊழாளர் பிறர்) இகழாத வினய்களய்த் (தேரக்) கருதிச் செய்தல்வேண்டும் தம்மோடு (ஏற்றுக்) கொள்ளாதவய்களய்க் கொள்ளமாட்டாது உலகம் (ஆதலால்) 10.

[153]

## வலியுடய்மய். (73)

வணய்வலியுந்தன்வலியுமாற்றான்வலியுந்
துணய்வலியுந்தூக்கிச்செயல். ... ... 1.

அல்லதறிவதறிந்ததன்கட்டங்கிச்
செல்வார்க்குச்செல்லாததில். ... ... 2.

உடய்த்தம்வலியறியாரூக்கத்தினூக்கி
மூடய்க்கண்முரிந்தார்பலர். ... ... 3.

அயர்ந்தாங்கொழுகானளவறியான்றன்னய்
வியந்தான்விரய்ந்துகெடும். ... ... ... 4.

சாலவேல்சாகாடுமச்சிறுமப்பண்ட

மேலமிகுத்துப்பெயின். ... ... ... 5.

உனிக்கொம்பரேறிஞரக்திறந்தூக்கின்
வினய்க்கிறுதியாகிவிடும். ... ... ... 6.

ஆற்றினளவறிந்தீகவதுபொருள்
மாற்றிவழங்குநெறி. ... ... ... ... 7.

ஆகாறளவிட்டிதாயினுங்கேடில்லய்
காகாறகலாக்கடய். ... ... ... ... 8.

மல்லாய்ந்துவாழாதான்வாழ்க்கயுளபோலக்
கில்லாகித்தோன்ருக்கெடும். ... ... 9.

உளவரய்தூக்காதவொப்புரவாண்மய்
வளவரய்வல்லய்க்கெடும். ... ... ... 10.



## தேர்வினர் வலியுடய ராதல். (73)

(தேர்வினன்றன்) வளத்தினது வலிமயும் தன்வலிமயும் பகய்வனது வலிமயும் (அவன்) துணய்வலிமயுஞ் சீர்தூக்கி (ஒரு வினய்) செய்தல்வேண்டும். ... ... ... 1.

(பயன் படுவினய்) அல்லாததயும் (பயனுடயதாய்) அறிவதயும் (முன்பே) அறிந்து அப்பயன்படுவினயிடத்துத் தரித்து நடக்குந் தேர்வினருக்கு நடவா வினயில்லய். 2.

உடய்த்தாகிய தமது வலிமயய் (இவ்வளவென) அறியாராகி மனவெழுச்சியினிடத்து நடத்தி முடக்கம் வந்தவிடத்து (முடியாது) முரிவுற்றோரு (முலகிற்) பலராம். 3.

(செய்தற்குரிய வற்றய்ச்) செய்து அவ்வினயிடத்து நடவானய்த் (தன்வலி) அளவறியானய்த் தன்னய் வியக்குந் தேர்வியய்ந்தோன் (நிலய்) விரய்விற் கெட்டுவிடும். ... 4.

(பண்டங்களய்) மிகுதியாக ஏற்றுக்கொள்ளும் (வலி) உடயவண்டிலு மச்சுமுரிந்துபோம் அந்தப்பண்டங்களய் மேலிடத்ததாக மிகச்செய்து பெய்யுமிடத்து. ... ... 5.

(மரத்திலேற) நினய்ந்து கொம்புடயாயேறிய ஒருவர் (அந்த) அகவலிகடந்து செலுத்துமிடத்து (அவர்) வினய்க்கு மிறுதியுண்டாகி (உயிரும்) விட்டொழியும். ... 6.

(தேர்வினர் உதவி) செய்யுமிடத்துத் (தமக்குள்ள) அளவறிந்து கொடுக்கக்கடவர் அதுவே பொருள்களய்க் (கய்மாறுக) மாற்றிவழங்கும் வழியாம். ... ... ... 7.

(பொருள்) வரும்வழியானது அளவாற் சிறிதாயவிடத்தும் (தேர்வினருக்குக்) கெடுதலில்லயாம் இசய்றுக்கும் புகய்வழி விரியாதிருக்குமிடத்து. ... ... ... 8.

(தனக்குள்ள பொருள்வலி) வளத்தய் ஆராய்ந்து வாழாத் தேர்வினன்வாழ்க்கயானது உள்ளதுபோல வலியுடயதாகிக் காட்டிப்புலப்படாது கெட்டு விடும். ... ... 9.

(தேர்வினர் தமக்கு) உள்ளனவற்றின் அளவைச் சீர்தூக்கியறியாத ஒப்புரவாகிய ஒளியுடையவளத்தின் வரம்பு விரைவாகக் கொட்டொழியும். ... ... ... ... 10.

[155]

## பொழுதுடைமை. (74)

காந்துகாற்கூகையைக்காக்கையிகல்வெல்லும்
வேந்தர்க்குவேண்டும்பொழுது. ... ... 1.

ஓராநாளொட்டவொழுகறிருவினைய்
ஈராமையார்க்குங்கயிறு. ... ... ... 2.

காலமன்றென்பவுளவோகருவியாற்
சீலமறிந்துசெயின். ... ... ... ... 3.

கருதாகருதினுங்கைகூடுங்காலந்
திருகியிடத்தாற்செயின். .. ... ... 4.

காலங்கருதியிருப்பர்கலங்காது
பாலங்கருதுபவர். ... ... ... ... 5.

ஊக்கமுடையானொடுக்கம்பொருதகர்

தாக்கற்குப்பேருந்தகய்த்து. ... ... ... 6.

பொள்ளெனவாங்கேபுறம்வேரார்காலம்பார்த்
துள்வேர்ப்பரொள்ளியவர். ... ... 7.

காணலர்க்காணிற்சுமக்கவிறுவரய்
சாணிற்கிழக்காந்தலய். ... ... ... 8.

எய்தற்கரியதியய்ந்தக்காலந்நிலயே
செய்தற்கரியசெயல். ... ... ... ... 9.

கொக்கொக்ககூம்பும்பருவத்துமற்றதன்
சிக்கொக்கசீர்த்தவிடத்து. ... ... ... 10.

[156]

தேர்வினர்கால மூடயராதல். (74)

(சூரியன்) காந்திசெய்யும் பகற்காலத்தில் கூகயய்க் காக்கயானது பொருதுவெல்லும் (அதுபோல்) விரும்பப்படுந் தேர்வின்ருக்கு வேண்டுங்காலமுடய்மய். ... ... 1.

(தேர்வினர் வினய்நலத்தய்) ஆராய்ந்து காலத்தோடு பொருந்த நடத்தல்வேண்டும் (அது) செல்வத்தய்த் தமதிடம் வேறுபடாமற் கட்டுங்கயிறும். ... ... 2.

(தேர்வினருக்குக்) காலம் அன்று என்பதாகிய வினய்களு முள்ளனவோ (முடித்தற்குரிய) கருவிகளால் ஒழுக்கத்த யறிந்து செய்யுமிடத்து. ... ... ... ... 3.

(தேர்வினர்) நினய்க்கவொண்ணாத பெரியவினய்களய் நினய்க்குமிடத்துங் கய்வந்துகூடும் காலத்துடன் திரும்பி இடத்தாலாகச் செய்யுமிடத்து. ... .. ... 4.

(தம்வினய்முடித்தற்குரிய) காலத்தய்நினய்ந்து (அறியார் போல) இருப்பர் (தமது நிலய்) கலங்காமலொளியய் விரும்புந் தேர்வினர். ... ... ... ... ... 5.

மனவெழுச்சியுடய தேர்வினன் (தன்வினய் முடித்தற்குரிய காலம்பார்த்திருக்கும்) ஒடுக்கமானது போர்க்கடா (மாறுகெடப்) பாய்தற்குப்பின் வாங்குந் தகய்தாம். ... 6.

(பகய்நேர்ந்தவிடத்தும்) பொள்ளலென்னும்படி அவ்விடத்தே புறத்தாரறிய வேர்வுறாராய் (வெலலற்குரிய) காலம்பார்த்துள்ளே வேர்ப்பர் ஒள்ளியதேர்வினர். ... 7.

(தேர்வினர்) பகய்வரய்க்காணுமிடத்து (வெல்லற்குரிய காலம்வருமளவும்) பொறுக்கக்கடவர் முடிவளவிற் சாணிடத்ததாய்க் கவிழ்ந்துவிடு மவர்தலய். ... ... 8.

(தேர்வினர் தமக்குக்) கிடய்ப்பதற்கரிய ஒருபொருள் எதிர் பெறக்கிடய்க்குமிடத்து அந்நின்றபொழுதே (அதுபெறச்) செய்தற்கரிய வினய்களய்ச் செய்தல்வேண்டும். 9.

(தேர்வினர் இரய்தேருங்) கொக்குப்போல்க ஒடுங்க வேண்டுங்காலத்தில் பின்பு அக்கொக்கின் பற்றுதலய்ப் போல்க (காலம்) சிறப்புறக வாய்த்தவிடத்து. 10.

## இடமுடைமை. (75)

இடங்கடந்தெவ்வினையுமெள்ளற்கமுற்று
மடங்காதபின்னல்லது. ... ... ... 1.

ஆக்கமார்மொய்ம்பினவர்க்குமரண்சேர்ந்தாந்
தாக்கம்பலவுந்தரும். ... ... ... 2.

ஆற்றருமாற்றியடுபவிடனறிந்து
போற்றார்கட்போற்றிச்செயின். ... ... 3.

எண்ணியாரெண்ணமிழப்பரிடனறிந்து
திண்ணியார்துன்னிச்செயின். ... ... 4.

ஆங்கயத்துவெல்லுமுதலையடும்புனலி
னுங்கிலதனைப்பிற. ... ... ... ... 5.

கடலோடாகால்வனெடுந்தேர்கடலேய்
நெடுநாவாயோடாநிலத்து. ... ... 6.

அண்ணூக்கமல்லாற்றுணைவேண்டாவெஞ்சாம

யெண்ணியிடத்தாற்செயின். ... ... 7.

சேக்கயுளான்செல்லிடஞ்சேரினுறுபடயா
ஞுக்கமழிந்துவிடும். ... ... ... 8.

சிறய்நலனுஞ்சீருமிலரெனினுமாந்த
ருறய்நிலத்தோடொட்டலரிது. ... ... 9.

காலாழ்களரினரியடுங்கண்ணஞ்சாக்
காலாண்முகத்தகளிறு. ... ... ... 10.

[158]

தேர்வினர் இடமுடயராதல் (75)

(தேர்வினர் தமக்குரிய) இடத்தய்க்கடந்து எந்தவினய்க ளயு மிகழாதிருக்கக்கடவர் (ஏனென்றால்) முழுவதும் (யாவருக்கும்) அடங்குதல்பெறாத சிக்கலதுவாம். ... 1.

செல்வம் நிறய்ந்த வலிமயிடத்த தேர்வினருக்கும் (தமக்குரிய) அரணிடத்தய்ச் சேர்ந்துண்டாகுகின்ற உரமானது அழகு பலவற்றயுங்கொடுக்கும். ... ... ... 2.

(எக்காலத்தேனும் ஒருவினையைச்) செய்யாத தேர்வினரும் செய்துமுடிப்பவராவார் (முடிக்கு) மிடச்செயலறிந்து பகைவர்கள்பால்(தம்மைப்)பாதுகாத்துச்செய்யுமிடத்து. 3.

(வெல்லுதற்) கெண்ணிய பகைவர் அவ்வெண்ண மிழந்து போவார் (தேர்வினர்) இடச்செயலறிந்து திட்பமுடையாராய் (வெல்லுநிலையை) அடுத்துச்செய்யுமிடத்து. ... 4.

(தனக்கிடம்) ஆகிய குளத்தின்கண் (பிறவுயிர்களையெல்லாம்) வெல்லும் முதலையானது வென்றுவிடும் புனலினிடத்தில்லாது நீங்கிய அம்முதலையைப் பிறவுயிர்கள். ... 5.

கடலின்கண் ஓடாவாங்கால்களால் வலியுற்ற நெடியதேர்களானவை அக்கடலை (இடமாகச்) சேர்ந்த நெடியகப்பல்கள் ஓடாவாம் நிலத்தின்கண். ... ... ... 6.

(தேர்வினருக்குப்) பொருந்திய மனவெழுச்சியல்லாமல் (வேறு) துணை வேண்டுவதில்லை குறைவுறுமையை ஆராய்ந்து (உரிய) இடத்தாற் செய்யுமிடத்து. ... ... 7.

(தனக்குரிய) சேர்விடத்துள்ளவனது (வினை) செல்லுமிடத்தையடையுமிடத்துப் பொருந்திய படையுடையதேர்வினனது (முன்புள்ள) ஆக்கமு மழிந்துபோம். ... ... 8.

(தம்மைக்காத்தற்குரிய) கோட்டை நலஞ்செய்தலும் (படைச்) செல்வமும் இல்லையென்னுமிடத்துந் (தோவுள்) மாந்தர் உறையுமிடத்துச்சென்றுபொருதல்(பிறர்க்கு)அரிதாம். 9.

கால்கள் புதைவதாய களர்நிலத்திடத்து நரிகளானவை வென்றுவிடும் இடங்கண்டஞ்சாத காலாட்களை (கொம்பிற் குத்திக்கொண்ட) முகத்ததாகிய யானையை. ... 10.

[159]

ஊழாண்மைப்பயன். (76)

எறும்பொருளின்பமுயிரச்சநான்கின்
றிறந்தெரிந்துதேறப்படும். ... ... 1.

மாணீறுகுற்றத்தினீங்கிவடுப்பரியுஞ்
சேனுழான்கட்டேதெளிவு. ... ... 2.

அன்மைகற்றாசற்றார்கண்ணுந்தெரியுங்கா
லின்மையரிதேவெளிறு. ... ... ... 3.

நகைநாடிக்குற்றமுநாடியவற்றுண்
மிகைநாடிமிக்ககொளல். ... ... ... 4.

இருமைக்குமேனைச்சிறுமைக்குந்தத்தங்
கருமமேகட்டளைக்கல். ... 5.

உற்ருரய்த்தேறுதலோம்புகமற்றவர்
பற்றிலர் நாணுர்பழி. ... ... ... 6.

காதன்மய்கந்தாவறிவறியார்த்தேறுத
லேதம்யெல்லாந்தரும். ... ... ... 7.

தேரான்பிறனய்த்தெளிந்தான்வழிமுறய்
தாராவிடும்பய்தரும். ... ... ... 8.

தேறற்கயாரயுந்தேராதுதேர்ந்தபிற்
றேறுகதேறும்பொருள். ... ... ... 9.

தேரான்றெளிவுந்தெளிந்தான்கணய்யுறவுந்
தாராவிடும்பய்தரும். ... ... ... 10.

[160]

இயப்முறய்வர்க்கு ஊழாண்மயாலாம் பயன்.

(76)

(இயய்முறய்வர்) வலிமய்ப்(பயம்)பொருட்(பயம்)இன்பப் (பயம்) உயிர்ப்பயம் (என்னும்) நான்கிடத்த திறங்களய்த் தெரிந்து (உள்ள நாளிற்) றெளியவே (பயன்) உண்டாம். 1.

மாட்சிகெடுக்குங் குற்றத்தின்கண் ஒதுங்கி வடிவுறு வினயில் வருத்தங்கொள்ளு முயர்முயல்வுடயானிடத்தே (ஊழாண்டியய் பயனுளதெனல்) தெளிவாம். ... ... 2.

அல்லாதவய்களய்க் கற்று (ஆள்பாற்) குற்றமற்ற இயய்முறய்வரிடத்துந் தெரிந்து பார்க்குங்காலத்து இல்லாமயருமயேயாம் (பயனில் வேறுய) வெள்ளறிவு. ... ... 3.

(ஆள்பிற்குரிய) விளக்கத்தய்ப் பார்த்துக் குற்றத்தயும் பார்த்து அவற்றுள் மிகுதியய்ப்பார்த்து அதிகமாயினவற்றய் (இயய்முறய்வர்) கொள்ளல் வேண்டும். ... ... 4.

(காண்புற்ற இயய்முறய்வரது) பெருமய்க்கும் அதுவல்லாத சிறுமய்க்கும் தமது தமது வினய்களே (பயன் விளங்க்காட்டுங்) கட்டளய்க்கல்லாம். ... ... ... 5.

(இயய்முறய்வர் பயனுற) வந்தடய்ந்தவரய்க் (காணில்) தேறுதலொழிக (ஏனெனில்) வேறுகிய அவர் பற்று ஒன்றுமில்லரராதலரல் வெள்கார் பழிச்செயற்கு. ... 6.

(இயய்முறய்வர்) காதற்பண்பேபற்றுக்கோடாக அறியவேண்டுமெவய்களய்யறியாதாரய் (இனமாத்) தேர்தலானது குற்றப்பண்புகளெல்லாவற்றயுங்கொடுக்கும். ... 7.

தேர்தல் செய்யானய் (இடம்போந்த) பிறனய் (இனமாகத்) தெளிந்த இயய்முறய்வனுக்குவழிவழியாகப் (பிறழீமய்கள்) தராத் துன்பங்களய் (அதுவே) கொடுக்கும். 8.

(இய்ய்முறய்வரினமாகத்) தேறுதலொழிக (இடங்கடந்த) யாவரயும் தேர்ச்சிசெய்யாது தேர்ச்சிசெய்தபின்பு தேறக்கடவர் தேறவேண்டும் பயனய். ... ... ... 9.

(இயய்முறய்வர்க்குப்பயன்) தேராதானிடத்து வய்த்ததெ ளிவும் தெளிந்தானிடத்து வய்த்த சந்தேகமும் (பிறவாற்) கொடுக்கமுடியாத துன்பத்தக்கொடுக்கும். ... 10.



நாடாண்மய் வகய். (77)

நன்மயுந்தீமயுநாடி நலம்புரிந்த
பன்மயாளுளப்படும். ... ... ... 1.

வாரிபெருக்கிவளம்படுத்துற்றவய்

சீராய்வான்செய்கவினய். ... ...
... 2.

அன்பறிவுதேற்றமவாவின்ம யிந்நான்குந்
தென்புடயான்கட்டேதெளிவு.
... ... 3.

வே஁றுகத்தேறியக்கண்ணும்

கோடாமய்கோடா துலகு. ... ... ... 10.

[162]

## இயய்முறய்வர் நாட்ல்கொண்டாளும் வகய்.

(77)

(இயய்முறப்வர்) நற்பண்பயுந் தீப்பண்பயும் நாடுதல் செய்து நல்வினய்விரும்பியபான்மயுடயானய் ஆளுதல் கொள்ளவே (அவ்வாட்சிக்குரிய பயன்) உண்டாம். ... 1.

வருவாயய்ப்பெருகச்செய்து (அதனற் பல) வளத்த யுண்டாக்கிப் பொருந்திய அவ்வளங்கட்குரிய சிறப்பய் ஆய் பவனய் (இயய்முறய்வன் நாடல்) புரிகவினயய். ... 2.

(இன) அன்பும் (வினய்) அறிவும் (பயன்) தெளிவும் (பொருள்) ஆசயின்மயுமாகிய இந்நான்கும் நன்றுக உடய இயய்முறய்வனிடத்தேயாங்(கொள்கய்த்)தெளிவு. ... 3.

வேறுவிதமுடய்ராகத் தெளிவுகொண்ட விடத்தும் (தத் தமுட்கோளுற்ற) வினய் வகுப்பால் (அதின்) மாறுடய ராகுமாந்தரும் (இயய் முறயிற்) பலராம். ... ... 4.

(வேந்தாதலய்) அறிந்து (அதற்குரிய) வழியிடத்துச் செய்யவல்ல இயய் முறய்வர்க்கல்லால் வினய் செய்தல் அறந் தானென்று ஏவும்பான்மயுடயதன்று. ... ... 5.

(இயய்முறய்வர் வேந்து) இடமுடயானய் நாடுதல்செய்து வினயயும் நாடுதல்செய்து (முடித்தற்குரிய) காலத்தோடு உய்யும்படி உணர்வுற்றுச் செய்தல்வேண்டும். ... 6.

(இயய்முறய்வர்) இந்த வினயய் இந்த ஏதுவால் இவன் (மனம்) முடிவுசெய்யுமென்று ஆராய்ந்து அந்த வினயய் அவனிடத்து (ஏனுக) விடுதல்வேண்டும். ... ... 7.

(இயய்முறய்வர் ஏண்மயில் மனம்) வேறுபடாதவனய் நாடுதல் செய்தபின்பு அவ்வேணுடயானய் (எவ்வினயினின் ருனே) அவ்வினய்க்கே உரியனுகச் செய்தல்வேண்டும். 8.

வினயிடத்து விடாமுயற்சியுடயவனது கேளாந்தன்மயய் வேருக நினய்க்கு மியய் முறய்வனய் விட்டொழிந்துபோம் (முன்புள்ள) செல்வமும். ... ... ... ... 9.

(இயய்முறய்வர்) நாள்கடோறும் நாடுதல்செய்க நிலய் பெற்ற நல்ல வினய்களய் (அவற்றய்ச்) செய்பவனதுநேர்ம யால் நேர்மயாந் தன்மயுடயது உலகம். ... ... 10.

[163]

## கோளியல். (78)

**பற்றற்றகண்ணும்பழமய்பாராட்டுத**
**லுற்றுறவர்கண்ணேயுள.** ... ... ... 1.

ஆக்கமார்சுற்றமியயினருப்பமுத்
தாக்குப்பலவுந்தரும். ... ... ... 2.

கோடமுனில்லாதான்வாழ்க்கய்குளவளா
நீடின்றிநீர் நிறய் ந்தற்று. ... ...

... 3.

சுற்றத்தாற்சுற்றப்படவொழுகல்செல்வந்தான்
பெற்றத்தாற்பெற்றபயன். ... ... ... 4.

அற்றமுமின்சொலுமாற்றினடுக்கிய
சுற்றத்தாற்சுற்றப்படும். ... ... ... 5.

பெருங்கொடயான்பேணுன்வெகுளியவனின்
மருங்குடயார்மாணிலத்தில். ... ... 6.

காக்கய்கரவாகரய்ந்துண்ணுமாக்கமு
மாக்கய்நீரார்க்கேயுள. ... ... ... 7.

விதிநோக்கான்வேந்தன்வரிசயாநோக்கின்
மதிநோக்கிவாழ்வார்பலர். ... ... ... 8.

சூரணத்தற்றுறந்தார்சுற்றமமராமய்
வாரணமின்றிவரும். ... ... ... ... 9.

வழிப்பிரிந்துகாரணத்தின்வந்தானய்வேந்த
னிழய்த்திருந்தெண்ணிக்கொளல். ... ... 10.

## நாடாளரது கோடற்றன்மய். (78)

(பொருண்முதலிய) பற்றுக்களற்றவிடத்தும் பழமய் (கோடலும்) பாராட்டுதலுமாகிய இவ்பொருந்திய உறவுற்ற நாடாளரிடத்தே உள்ளனவாம். ... ... ... 1.

(நாடாளருக்கு) ஆக்கம் நிறய்ந்த சுற்றமானது பொருந்தக்கிடய்க்குமிடத்துக் (கோடற்பயன்) கிளய்த்தலறுத் வலிமய் பலவற்றயுங் கொடுக்கும். ... ... ... 2.

(புகழ்) கொள்ளுதல் தன்னிலில்லாத நாடாளனது வாழ்க்கயானது குளவளாகம் நெடியகரயில்லாமல் நீரால் நிறய்ந்த அத்தன்மய்த்தாம். ... ... ... ... 3.

(நாடாளர் தமக்குச்) சுற்றமானவராலே சுற்றிக்கொள்ளும்படி நடத்தல்வேண்டும் செல்வத்தய்த்தானுகப்பெற்ற அதனுற்பெற்ற (புகழ்ப்) பயன் (அதுவேயாம்). ... ... 4.

(நாடாளர்) சமயத்துதவுமுதவியும் இனியசொல்லும் செய்யுமிடத்து (அவருக்கு) நெருக்கிய சுற்றத்தாராலே சுற்றும்படியான (திகழ்வு) உண்டாம். ... ... ... 5.

(நாடாளன்) பெரியகொடயுடயானுய்ப் பேணுதல்செய்யான் கோபத்தய் (என்றல்) அவனிடத்துப்பக்கத்தே (திகழ்வாக) உடயராவார் பெரியநிலத்தின்கண். ... ... 6.

காக்கய்களானவய் (இரய்கண்டவிடத்து) ஒழியாமல் (இனத்தய்) அழய்த்துண்ணும் (அதுபோல் ஒளிபெறும்) ஆக்கமும் (இனப்) பற்றுடய நீர்மயாளர்க்கே உளவாம். 7.

விதியய்நோக்கானய் (வினயய்) விரும்பப்பெறு நாடாளன். (சுற்றங்கொள்ளும்) வரிசயாலே நோக்குமிடத்து அவ்வறி(வொளியய்) நோக்கி வாழ்பவர்பலராம். ... ... 8.

(யாதேனுமொரு காரணத்தால்) அச்சமுண்டாகவே தன்னிற்றுறந்தவர் (நாடாளராய) சுற்றத்துத்தங்காமய் (வேறெவ்விதமான) தடயுமில்லாமலே வந்துசேரும். ... 9.

(தனக்குரிய) இடம் பிரிந்துபோய்ப் (பின்பொரு) காரண இடத்தால் வந்தவனய் விரும்பப்பெறும் நாடாளன் அழுத்தமாக இருந்தாராய்ந்து (இனமாகக்) கோடல்வேண்டும். 10.

[165]

புகழுடய்மய். (79)

விவிதவெகுளியிற்றீதேசிறந்த
துவளுமகிழ்ச்சியிற்சோர்வு. ... ... 1.

பொச்சாப்புக்கொல்லும்புகழயறிவினய்

நிச்சநிரப்புக்கொன்றுங்கு. ... ...

... 2.

பொச்சாப்பார்க் கில்லய்புகழ்மய து வுலகச்

சொச்ச நூலோர்க்கு ந்துணிவு. ...

... 3.

அச்சமுடயார்க்கர ணில்லயாங்கில்லய்

நச்ச வுடயார்க்கு நன்கு. ... ...

... 4.

என் னுறக்காவா திழுக்கியான்ற ன்பிழ ய்

வென் னூறிரங்கிவிடும். ... ... ... 5.

வாயினயார்மாட்டுமென் றும்வழுக்காம
யாயின துவொப்பதில். ... ... ... 6.

அரியவென் ருகா தவில்லய்பொச்சாவாத்

திருவிறைற்போற்றிச்செயின். ... ... 7.

புகழ்ந்தவைப்போற்றிச்செயல்வேண்டுஞ்செய்யா
திகழ்ந்தார்க்கெழுமையுமில். ... ... ... 8.

இகழ்ச்சியிற்கெட்டாரயுள்ளுகதாந்த
மகிழ்ச்சியின்மைந்துறும்போழ்து. ... ... 9.

வள்ளியதெய்தலெளிதுமன்மற்றுந்தா
முள்ளியதுள்ளப்பெறின். ... ... ... 10.

[166]

## கோளினர் புகழுடையாராதல். (79)

(கோளினருக்கு) வேறு வேறான கோபத்திடத்த தீமையினுந் தீமையேயாம் சிறப்புற்ற (புகழால்) அசைகின்ற மகிழ்ச்சியிடத்துச் சோருதல். ... ... ... ... 1.

(கோளினருக்கு) மறதியுளதேற் கொன்றுவிடும் (தம்மினைய்வாலாய) கீர்த்தியை அறிவிடத்த நலத்தை நித்திய வறுமையானது கொன்று கெடுத்தாற்போல. ... ... 2.

(தாம்செய்யவேண்டும் வினைகளில்) மறதி கொள்ளுங் கோளினர்க்கில்லையாம்புகழ்ப்பண்பு அது உலகிலுள்ள தூய்மை நூலோருக்கும் (ஒத்த) துணிபாம். ... ... 3.

பயம் (இயல்பாய்) உள்ளவருக்கு அரணிருந்தும் (பயன்) இல்லய் அதுபோல் இல்லயாம் (புகழ்வேண்டுமென) நச்சுதலுடய கோளினருக்கு நல்லபயன், ... ... 4.

யாதேனு (மொருதீது) வருதற்கு முன்பே பாதுகாவாது வழுவவிட்ட கோளினன் (மனம்) தன் பிழய்க்குப்பின்பு (தானே) நூறுமடங்கா யிரங்கிவிடும். ... ... 5.

(கோளினர்க்குத்தம்பாற்) பொருந்திய யாவரிடத்து மெக்காலத்தும் (புகழில்) வழுக்காத பண்புளதாகுமிடத்து அப்பண்பயொப்பது (பிறிதொன்றும்) இல்லய். ... 6.

(கோளினர் முடித்தற்கு) அரியனவென்று ஆகாதவ யில்லய் மறவாமயாகிய செல்வ இடத்தாற் பாதுகாத்துப் (புகழுறச்) செய்யுமிடத்து. ... ... ... 7.

(நூலோராற்) புகழப்பெற்ற வினய்களய்ப் பாதுகாத்துக் (கோளினர்) செய்தல்வேண்டும் செய்யாமலிகழ்ந்துவிட்டவருக்கு உயர்வுப்பண்பென்றுமில்லய். ... ... 8.

(கோளினர்) இகழ்விடத்திற்கு எட்டாத புகழுடயோரய் நினய்க்கக்கடவர் தாம் தம்முடய மகிழ்ச்சியிடத்து வலிமயடயும் பொழுதில். ... ... ... ... 9.

(கோளினர்) வளமயுள்ள புகழய் அடய்தல் எளிதாகும் நிலயாகப் பின்புந் தாம் (செய்ய) நினய்ந்ததய் (மறவாமல்) நினய்க்கப் பெறுமிடத்து. ... ... ... ... 10.

ஓர்ந்துகண்ணோடாதிறய்புரிந்தியார்மாட்டு
மார்ந்துசெய்வக்தேமுறய். ... ... ... 1.

வானோக்கிவாழுமுலகெல்லாமன்னவன்
கோனோக்கிவாழுங்குடி. ... ... ... 2.

அந்தணர்நூற்குமறத்திற்குமாதியாய்
வந்ததுமன்னவன்கோல். ... ... ... 3.

குடிதழீஇக்கோலோச்சுமாநிலமன்ன
னடிதழீஇநிற்குமுலகு. ... ... ... 4.

நயமுளிக்கோலோச்சுமன்னவனாட்ட
வியலும்விளயுளுந்தொக்கு. ... ...

... 5.

வேலன்றுவென்றிதருவதுமன்னவன்

கோலதூஉங்கோடாதெனின். ...
... 6.

இறைகாக்கும்வையகமெல்லாமவனை
முறைகாக்குமுட்டாச்செயின். ... ... 7.

எண்பதத்தானோரா முறைசெய்யாமன்னவன்
தண்பதத்தாற்றானேகெடும். ... ... 8.

குடிபுறங்காத்தோம்பிக்குற்றங்கடிதல்
வடுவன்றுவேந்தன்றொழில். ... ... 9.

கொலையிற்கொடியாரைவேந்தொறுத்தல்பைங்கூழ்
களைகட்டதனொடுநேர். ... ... ... 10.

## கோளினர் தழுவலுடையராதல். (80)

(கோளினர் தத்தமிற்செய்வனவற்றை) ஆராய்ந்து இடம் பேராமல் தமதிறையிலிருந்து யாவரிடத்தும்(அன்பு)நிறைந்து செய்யும் (அந்த) அகத்தழுவலே) முறைமையாம். ... 1.

(பருவங்களிற்பெய்யும்) மழையைநோக்கி வாழுமுலகமெல்லாம் (அதுபோற்றழுவல்) மன்னியகோளினனது கோன்மையை நோக்கி வாழுங்குடிகள். ... ... ... 2.

அழகியதண்மையுடைய மேலோரது நூலுக்கும் அறத்திற்கிடமான வினைக்குங் காரணமாகவந்தது (தழுவலில்) மன்னியகோளினனது கோன்மையாம். ... ... ... 3.

கூடிய இனத்தாரோடு தழுவிக்கோன்மை செலுத்துகின்ற பெரியநிலத்துமன்னிய கோளினனுடனே (எக்காலத்தும்) தழுவிநிற்கும் உலகமானது. ... ... ... 4.

(தழுவுதலாலுண்டாகும்) நயத்தை நினைந்து கோன்மை செலுத்தும் நிலைபெற்ற கோளினனது நாட்டின்கண்ணவாம் (மழை) விரிவும் விளைவும்கலந்து. ... ... 5.

(படைமுகத்தெறியும்) வேலாயுதமன்று வெற்றிதருவது (தழுவல்) மன்னிகோளினன் கோன்மையாகிய அது சிறிதுங் கோணுதென்னுமிடத்து (அதுவேதரும்). ... ... 6.

(தமக்குரிமையாய்த்) தங்குமிடத்துக் காக்கப்பெறும் வைப்பிடமான உலகமெல்லாம் அக்கோளினனை முறையாகக் காவல்செய்யு முட்டுப்பாடின்றிச்செய்யுமிடத்து. ... 7.

வளமயுள்ள இடத்தாலே உள்ளதயாராயாமலும் (தனக்குரிய) முறய்மய்செய்யாமலும் மன்னியகோளினனுக்குத் தண்மயழிவால் (நிலய்) தானேகெட்டொழியும். ... 8.

(தன்னோடு) கூடினோரய்ப் பிறர்வருத்தாமற் பாதுகாத்துயர்த்தி (அவர்பாற்) குற்றங்கண்டாற் றண்டித்தல் விடத்தக்கதன்று விரும்பப்பெறுங்கோளினற்குரியதொழிலாம். 9.

கொலயிடத்த கொடுமயினுங் கொடியாரய் (உலகம்) விரும்பப்பெறுங்கோளினன்றண்டித்தல் பசியபயிருக்கு அலய்வுசெய்யுங்களயய் களய்ந்ததனோடொப்பாகும். 10.

[169]

ஒளியுடய்மய். (81)

அல்லகொண்டாரிற்கொடிதேயலய்மேற்கொண்

மெல்லவய்செய்தொழுகும்வேந்து. ...

... 1.

ஆலயினின்றுனிடுவென்றதுபோலு

மேலாதுநின்றுனிரவு. ... ...

... 2.

நாடொறுநாடிமுறை செய்யாமன்னவ

ணாடொறுநாடுகெடும். ...

... 3.

கூழுங்குடியுமொருங்கிழக்குங்கோல்கோடி
யாழாதுசெய்யுமரசு. ... ... ... 4.

அல்லற்பட்டாற்றாதழுதகண்ணீரன்றே
செல்வத்தைத்தேய்க்கும்படை. ... ... 5.

மன்னர்க்குமன்னுதல்செங்கோன்மைக்கின்றேன்
மன்னாவாமன்னர்க்கொளி. ... ... ... 6.

நளியின்மைஞாலத்திற்கெற்றற்றேவேந்த
ணெளியின்மைவாழுமுயிர்க்கு. ... ... 7.

இன்மையினின்னாதுடைமைமுறைசெய்யாக்

கொன்மயன்கோற்கீழ்ப்படின். ... ... 8.

ஒல்லாதமன்னவன்செய்யினுறய்கோடி
மல்லாதுவானம்பெயல். ... ... ... 9.

மாவலங்குன்றுமறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன்காவானெனின். ... ... ... 10.

[170]

## கோளினர் ஒளியுடையராதல். (81)

அல்லனவாய தன்மய்களய் மேற்கொண்டாரிட்த்த கொடுமயினுங் கொடியதேயாம் அலய்த்தற்றொழிலய் மேற்கொண்டு மெல்வினய்களயாற்றிநடக்குங் கோளினர்விருப்பு. 1.

கரும்பாலயினிடத்து நின்றதலய்வன் (அங்குற்றாயதில்) இடுவென்று கூறுவதுபோலாம்(ஒளி) பொருந்தாமல் நின்ற கோளினன் (கூடினோர்பாலிரக்கும்) இரப்புரய். ... 2.

நாள்கள்தோறும் நாடுதல்செய்து (ஒளியுறுதற்குரிய) முறய்களய்ச்செய்யாத நிலயுள்ளகோளினனுக்கு நாள்கள்தோறும் நாடுதற்றன்மய்கெட்டுவிடும். ... ... ... 3.

(கோளினருக்குப்) பொருளும் கூடிவாழுமுறவும் மொருசேர இழந்துபோம் கோன்மய்கோட்டமுற்று அழுந்த நோக்காதுசெய்யுந் தலய்மய்த்தன்மயால். ... ... 4.

(கூடிவாழுமுறவோர்) துன்பப்பட்டு(அவர்கொடுமயய்ச்) சகிக்கமுடியாது அழுதகண்ணீரன்றே (கோளினர்) செல்வத்தய் மெலியச்செய்யும் பாணமாவது. ... ... 5.

நிலய்பெற்ற கோளினர்க்கு நிலய்பெறுதல் செவ்விய கோற்றன்மயாம் (அந்த) அகவொளியில்லயானல் நிலயாவாம் அந்நிலய்க்கோளினர்க்கு ஒளியானது. ... ... 6.

(மழயின்) குளிர்ச்சியின்மயானது உலகிடத்திற்கு எத்தன்மய்த்தோ அத்தன்மய்த்தேயாம் விரும்பப்பெறுங் கோளினன் ஒளியின்மயானது வாழுமுயிர்கட்கு. ... 7.

வறுமயிடத்த துன்பத்தினுந் துன்பமுடய்மயாம் (ஒளியுறும்) முறயய்ச்செய்யாத கொலய்ப்பண்புடயகோளினன் கோன்மய்க்குக் கீழ்ப்படுமிடத்து. ... ... ... 8.

(ஒளி) பொருந்தாத வினய்களய் நிலய்பெற்றகோளினன் செய்யுமிடத்து உயர்வுகோணிவளம்பல்காது(மேகம்) மழய்பெய்தலில். ... ... ... ... ... ... 9.

(தனது) பெரிய வலிமய்குறயும் மற்றய்த்தொழிலினரும் (தம்) நூலய்மறந்துவிடுவர் காவல்பெற்றகோளினன் (ஒளிபொருந்தக்) காவானென்னுமிடத்து. ... ... 10.

தக்காங்குநாடித்தலய்ச்செல்லாவண்ணத்தான்
மிக்காங்கொறுப்பதுவேந்து. ... ... 1.

நீங்காமய்மெல்லவெறிகநெடிதாக்கம்
வீங்குதல்வேண்டுபவர். ... ... ... 2.

வெருவந்தசெய்தொழுகும்வெங்கோலனாயி
னொருவந்தமொல்லய்க்கெடும். ... ... 3.

இறய்கடியனென்றுரய்க்குமின்னாச்சொல்வேந்த
னுறய்கடுகியொல்லய்க்கெடும். ... ... 4.

பேய்கண்டவின்னாமுகத்தான்பெருஞ்செல்வ
மோய்கண்டன்னதுடய்த்து. ... ... 5.

நீடியகண்ணிலனாயினெடுஞ்செல்வங்
கேடொன்றியாங்கேகெடும். ... ... ... 6.

கடுமொழியுங்கய்யிகந்ததண்டமும்வேந்த
னடுமுரண்டேய்க்குமரம். ... ... ... 7.

வேறூற்றியெண்ணாதவேந்தன்சினத்தாற்றிச்
சீறிற்சிறுகுந்திரு. ... ... ... ... 8.

செருவந்தபோழ்திற்சிறய்செய்யாவேந்தன்
வெருவந்துவெய்துகெடும். ... ... ... 9.

கல்லார்ப்பிணிக்குங்கடுங்கோலதுவல்ல
புல்லாதிலக்குப்பொறய். ... ... ... 10.

[172]

---

நாடாளரது விரும்பற்றன்மய். (82)

(நாடாளர்தவறுபுரிந்தாரய்த்) தகுந்தபடி ஆராய்ந்து (அவர்பின்பும் அத்தவ) றிடத்துச் செல்லாவகயால் மிகுதிபோற்காட்டி (அள்வாத்) தண்டிப்பதேவிரும்பற்றன்மயாம். 1.

(உறவாயினுர்தவறுகாணினும்) நீங்கிவிடாவண்ணம் இலகுவாகத் தண்டிக்கக்கடவர் நெடிதாகிய ஆக்கமானது (நாடோறும்) அதிகப்படுதலய் வேண்டிய நாடாளர். ... 2.

(நாடாளன்தன்னவர்க்கு) அச்சமுண்டாக்குவனவற்றயே செய்துநடக்கும் வெவ்வியகோற்றன்மயனுயவிடத்து(அவர்நயக்கும்) ஒற்றுமய் விரய்விற்கெட்டுவிடும். ... ... 3.

தங்குமிடத்தோராற் கடுமயானவனென்று சொல்லப்பெறுமின்னுச்சொல்லய்விரும்பும்நாடாளனுக்கு உறய்விடத்து (உள்ளநயப்புங்) குறய்ந்து விரய்விற்கெட்டுவிடும். ... 4.

(நிகழ்பவர் காணுந்தோறும்) பேயய்க்கண்டாற்போலுந் துன்பமுகத்தயுடய நாடளனது பெரிய செல்வத்திற்கு ஓய்வுண்டானாற்போலுந் தன்மயுடயதாம். ... ... 5.

(நாடாளன் நிகழ்வாகிய) நெடுகிய கண்களில்லதவனாகிய விடத்து (அவனது) நெடியசெல்வம் கெடுதலய் அடய்ந்து (இல்லாத) அப்பொழுதே கெட்டுவிடும். ... ... 6.

(யாவரிடத்துங்)கடுமயானசொல்லுங் குற்றத்தின்மிகுந்த தண்டமுமாகிய விரண்டும்விரும்பும் நாடாளனுக்கு அடுத்த வலியாகிய (உயர்வய்) மெலிக்கும் அரமாகும். ... 7.

(உயர்வுக்கு) வேறுவனவற்றய்ச்செய்து (அவ்வுயர்வய்) எண்ணாத விருப்புறும் நாடாள்ன் (தன்னய்க்) கோபத்துய்த் துச்சிறுமிடத்துக்குறய்வடயும்(அவன்)செல்வம். ... 8.

(பகய்வராற்) போர்வந்த பொழுதின்கண் (தமர்களாகிய) அரண்செய்துவய்க்காத விருப்புறும் நாடாளனது (செல்வம்) வெருவலுற்று வெய்யதாய்க் கெட்டுவிடும். ... 9.

(நாடாளர் விரும்பப்பெறும்வினய்) கற்காதவராய்ப் பற்றிக்கொள்ளுங் கடியகோற்றன்மயான அதுவல்லது பொருந்தாவாம் பூமிக்குத் (தாங்கற்கரிய) சுமய். ... 10.



நயப்புடய்மய் (83)

கண்ணோட்டமென்னுங்கழிபெருங்காரிகய்

உண்மையானுண்டிவ்வுலகு. ... ... .. 1.

உண்ணோட்டத்துள்ள துலகியலக்திலார்
புண்மய்நிலக்குப்பொறய். ... ... ... 2.

பண்ணென்னும்பாடற்கியய்பின்றேற்கண்ணென்னும்
கண்ணோட்டமில்லாதகண். ... ... ... 3.

திண்ணமுகத்தெவன்செய்யுமளவினுற்
கண்ணோட்டமில்லாதகண். ...

... ... 4. க

ண்ணிற்கணிகலங்கண்ணோட்டமக்தின்றே
லோண்ணெங்குணரப்படும். ...

... 5.

மண்ணோடியய்ந்தமரத்தனயர்கண்ணோடு
முண்ணக்கண்ணோடாதவர். ... ... 6.

கண்ணோட்டமில்லவர்கண்ணிலர்கண்ணுடையா
ரொண்ணோட்டமின்மயுமில். ... ... 7.

கருமஞ்சிதயாமற்கண்ணேடவல்லார்க்
குரிமயுடய்த்திவ்வுலகு. ... ... ... 8.

கறுத்தாற்றும்பண்பிஞர்கண்ணுங்கண்ணேடிப்
பறித்தாற்றும்பண்பேதலய். ... ... 9.

நாகரியநஞ்சுண்டமய்வர்நயத்தக்க
பாகமுறய்வேண்டுபவர். ... ... ... 10.



## வேந்தினர் நயத்தலுடயராதல். (83)

(வேந்தினருக்குக்) குறிப்பின்வழிச் செல்லுதலென்கின்ற (பிற அழகய்ச் சிறிதெனக்) கழிக்கும் பெரிய அழகுண்மயானல் (நயப்பு) உண்டாகும் இவ்வுலகின்கண். ... 1.

உள்ளத்தய் (உணருங்) கண்திட்டத்தாலுள்ளது உலக இயல்பானது (அந்த) அகநயப்பில்லாத வேந்தினர் சேர்க்கயானது பூமிக்குத் (தாங்கற்கரிய) சுமயாம். ... ... 2.

இசயானது என்னுடயதாம்பாட்டிற்குப் பொருத்தமில்ல யானல் (அதுபோல் வேந்தினர்க்கு) கருத்தானது என்னு டயதாம் குறிப்பின்வழிச்செல்லுதலில்லாவிடத்து. ... 3.

(வேந்தினரய்க் கண்கள்) திட்பமான முகத்திலிருந்து எவனெனச்செய்யும் (தமக்குரிய) அளவிடத்தால் கட்குறி வழிச்செல்லுதலில்லாத விடத்து. ... ... ... 4.

(வேந்தினரது) கண்ணிடத்துக்கு அணியும் பணியாவது கட்குறிவழிச் செல்லுதலாம் (அந்த) அகஙயப்பில்லயானல் ஒளியுடயராக எவ்விடத்துணரும்படியுண்டாம். ... 5.

மண்ணின் (சாரத்தயுண்டு இடம்பெயராது) பொருந்தி நிற்கும் மரத்தய்நிகர்ப்பர் கருத்தோடுமுட்கொள்ளும்படி கட்குறிவழிச்செல்லாத வேந்தினர். ... ... ... 6.

கட்குறிவழிச் செல்லுதலில்லாத வேந்தினர் (கண்ணிருந் துங்) கண்ணிலராவார் கண்ணுடயவர் (பிறர்) எண்ணிய வழி (குறிப்பாற்) செல்லுதலின்மயுமில்லய். ... 7.

(நயப்புற்ற) வினய்கள்சிதய்வுபடாமற்கட்குறிவழிச் செல லுதல் வல்லவேந்தினர்க்கு (எக்காலமும்) உரிமயாகவுடய தாகுமிந்த உலகமானது. ... ... ... ... 8.

(ஒரு வினயய் மனதிற் கோபங்கொண்டுசெய்யும்பண் பிடமுடயாரிடத்தும் (வேந்தினர்) கட்குறிவழிச்சென்று (அதற்குச்) சாய்ந்து செய்யும் பண்பேதலய்மயாம். ... 9.

நாவாலே கரிதாகிய நஞ்சயும் உண்டடங்குவார் (தம் மினமாயினுரோடு) நயப்புறத்தக்க பாகத்தய் முறய்மயாக விரும்புகின்ற வேந்தினர். ... ... ... ... 10.

## ஒற்றாடல். (84)

ஒற்றுமுரய்சான்றநூலுமிவயிரண்டுங்
கற்றுணர்மன்னவன்கண். ... ... ... 1.

எல்லார்க்குமெல்லாநிகழ்பவயெஞ்ஞான்றுஞ்
சொல்லறிதல்வேந்தன்றொழில். ... ... 2.

ஒற்றினொற்றிப்பொருடெரியாமன்னவன்
கொற்றங்கொளக்கிடந்ததில். ... ... 3.

வினய்செய்வார்தஞ்சுற்றம்வேண்டாதாரென்றாங்
கனய்வரயுமாராய்வதொற்று. ... ... 4.

கடாஅவுருவொடுகண்ணஞ்சாதியாண்டு
மடாஅமய்வல்லதேயொற்று. ... ... 5.

அன்பின்படிவத்தராகியிறந்தாராய்த்
துன்செயினுஞ்சோர்விலதொற்று. ... ... 6.

அய்யப்பால்கேட்கவற்றாகியறிந்தவய்
எய்யப்பாடில்லதேயொற்று. ... ... 7.

ஒற்ருெற்றித்தந்தபொருளயுமற்றுமோ
ரொற்றிஞெலொற்றிக்கொளல். ... ... 8.

ஒற்ருெற்றுணராமயாள்கவுடன்மூவர்ச்
செற்ருெக்கதேறப்படும். ... ... ... 9.

சிறப்பறியவொற்றின்கட்செய்யற்கசெய்யின்
மறுப்படுத்தாஞகுமறய். ... ... ... 10.

[176]

## வேந்தினர் நிகழ்வுடயராதல். (84)

(தன்னுறவாயிஞரிடத்து) ஒற்றுமயும் (புகழ்) உரய்நிறய்ந்த ஆராய்வுமாகிய இவயிரண்டும் (நிகழ்வு) கற்றுணர்ந்த நிலயுடய வேந்தினன் இடத்தனவாம். ... ... 1.

(தமராகிய) (எல்லாருக்கும் எல்லாவிதத்திஞலு நிகழுகின்ற வினய்களய் எக்காலத்தும் (அவ்வவரது) சொல்லாலறிதலே வேந்தினனது தொழிலாம். ... ... 2.

ஒற்றுமயிடத்தாஞல்(நிகழ்வு) பொருந்தச்செய்து (அதற்குரிய) பொருளய்த்தெரியாத நிலயுடய வேந்தினன் வெற்றிகொள்ளும்படி கிடந்தவினய் (பிறிது) இல்லய். ... 3.

(வேந்தினர்) வினைகளைச்செய்பவர் தமது சுற்றத்தார் விரும்புதலில்லாத அயலார் என்றாகிய எல்லாரையும் ஆராய்ந்து (நிகழ்வை) அறிவது ஒற்றுமைப்பண்பாம். ... 4.

(வேந்தினருக்கு) சந்தேகிக்கப்படாத உருவத்தோடு கருத்தஞ்சாமல் எவ்விடத்தும் மடங்குதலின்றி (நிகழ்வால்) வல்லதே ஒற்றுமைப்பண்பாம். ... ... ... 5.

(வேந்தினர்) அன்பிடத்தமைந்த வடிவுடையராகி (தம்வரம்பு) கடந்தவராய்த் (தமர்)துன்பஞ் செய்தவிடத்தும் (தம்து நிகழ்வு) சோர்தலில்லதே ஒற்றுமைப்பண்பாம். ... 6.

(வேந்தினர்) சந்தேகிக்கற்பாலனவாயவினைகளைக்கேட்கும் வலியுடையதாகி அவ்வாறறிந்தவைகளை எய்த்துவிடும்படி யில்லாததே ஒற்றுமைப்பண்பாம். ... ... 7.

(வேந்தினர்) ஒற்றுமைப்பண்பால் (தமர்களோடு) பொருந்தி யீட்டிய பொருள்களையும் வேறுமொரு ஒற்றுமையிடத்தால் (நிகழ்விற்) கொள்ளுதல் வேண்டும். ... ... 8.

(வேந்தினர் தமர்பால் வைத்த) ஒற்றுமைய (அவர்) ஒற்றுமையாலுணராவண்ண மாளக்கடவர் (அதனால்) உடனே நீங்குபவராய்வெறுத்து ஒப்பாகத்தெளிய(நிகழ்வு)உண்டாம். 9.

(வேந்தினர் யாதேனும் ஒரு) சிறப்பைப் (பிறர்) அறியும்படி ஒற்றுமையிடத்துச்செய்யாதொழிக செய்யுமிடத்துக்குற்றப்படுத்தினுகும் மறைவுக்கு. ... ... ... 10.

உடையரெனப்படுவ தூக்கமக்தில்லா

ருடையதுடையரோமற்று.

... ... 1.

உள்ளமுடைமையுடைமைபொருளுடைமை
விள்ளாதுநீங்கிவிடும்.

... ... ... 2.

ஒருவவிழந்தேமென்றல்லாவாருக்கக்
கருவாளுங்கைத்துடையார்.

... ... 3.

ஆக்கமதர்வினைச்செல்லுமசைவிலா

ஆக்கமுடையானுழய். ... ... ...

... 4.

அள்ளத்தனயமலர் நீட்டமா ந்தர் தம்
உள்ளத்தனய துயர்வு. ...

... ... 5.

உள்ளுவதெல்லாமுயர்வுள்ளன்மற்ற து
தள்ளினுந்தள்ளாமய் நீர்த்து. ... ... 6.

ஒட்டிடத்தொல்காருரவோர்புதயம்பிற்
கட்டுப்பாடேன்றுங்களிறு. ... ... 7.

உள்ளமிலா தவரொய்தாருலகத்துத்
தெள்ளியமென்னுஞ்செருக்கு. ... ... 8.

அரிய துகூர்ங்கோட்டதாயினும்யானய்
ஓருவும்புலிதாக்குறின். ... ... ... 9.

உரமொருவற்குள்ளவெறுக்கயக்தில்லார்
ஷிரிமக்களா தலேவேறு. ... ... ... 10.

## வேந்தினருயர்வுடையராதல். (85)

(வேந்தினரய் உயர்வு) உடையரென்னும்படி உண்டாவது உள்ளக்கிளர்ச்சியாம்(அந்த)அகத்துயர்வில்லார் உடையதாய பொருளால் உடையராவாரோ (அதற்கு) வேறும். ... 1.

(வேந்தினருக்கு) உள்ளக்கிளர்ச்சியுடைமையே (எக்காலத்தும் நீங்காத உயர்வு) உடைமையாம் பொருளுடைமையானது (உடையாருக்கும்) சொல்லாது (இடையில்) நீங்கிவிடும். 2.

(தமக்குள்ளனவாய பொருள்கள்) நீங்க (அதை) இழந்தோமென்று மயக்கமுறார் உள்ளக்கிளர்ச்சிக்கு மூலமாகிய அறிவை ஆளும்பொருளுடைய வேந்தினர். ... 3.

(பெறுதற்கரிய) ஆக்கமானது வழிவிசாரித்துச் சென்றடையும் (எவ்வகை வினையினுஞ்சலித்து) அசைவுறாத உள்ளக்கிளர்ச்சியுடைய வேந்தினன் (தங்கும்) இடத்தை. ... 4.

நெருக்கத்தினளவினவேயாம் (நீரின்கணுள்ள) மலர்களின் (காம்பு) நீட்சி (அதுபோல் வேந்தினராய) மனுடர்க்குத் தமதுள்ளக்கிளர்ச்சியளவாகும் உயர்வு. ... 5.

(வேந்தினர் முயல்வுற்று) நினைப்பனவெல்லாம் (ஊக்கமாகிய) உயர்வை நினைத்தலாம் பின்பு அப்பண்பு விலக்கியவிடத்தும் விலகாத நீர்மையுடைத்தாம். ... ... 6.

(தமது வினைகள்) சுருங்கியவிடத்துந் தளரார் (உள்ளே கிளரும்) அறிவுடையவேந்தினர் (உடலிற்பாய்ந்து) புதைந்த அம்புகளைப்பிடுங்கிப் பெருமைகாட்டும் யானை(போல்). 7.

உள்ளக்கிளர்ச்சியில்லாத வேந்தினர் அடையப்பெறுர் உல கின்கண் (வினையால்) தெள்ளியதன்மையுட்யோமென்று சொல் லும் (உயர்வுக்) களிப்பய். ... ... ... ... 8.

(பருமயிற்றன்னயொப்பது) அரியதாய்க் கூர்மயானகொ ம்புடையதாய விடத்தும் யானையான்து பயந்தோடும் (உள்ளத் துயர்ந்த) புலியாற்ருக்கப்பெறுமிடத்து. ... ... 9.

(ஊக்க) அறிவேவேந்தின னொருவனுக்கு(என்றும்)உள்ள பொருளாம் (அந்த) அகத்துயர்வில்லாதவர் (உயர்வால்) விரிவுபெற்ற மானுடராகுதலே வேறும். ... ... 10.

[179]

ஏணியல். (86)

வீசினுங்குனருவிளக்கமடியென்னு
மாசூரமாய்ந்துகெடும். ... ... ... 1.

மடியய்மடியாவொழுகல்குடியய்
மிடியேகவேண்டுபவர். ... ... ... 2.

பிடி மடிக்கொண்டொழுகும் பேதய்பிறந்த

முடிமடியுந்தன்னினுமுந்து.

... ... 3.

மாண்டெறுகுற்றம்பெருகுமடிமடிந்
தாண்டவுளுற்றிலவர்க்கு. ... ...

... 4. வடுநீர்மறவிமடிதுயிலுன்குங்

கடுநீரார்காமக்கலன். ... ...

... 5.

மாண்புளார்பற்றமய்ந்தக்கண்ணுமடியுடையா ரேண்பயனெய்தலரிது.

... ... ... 6.

மாண்டிரிந்தெள்ளுஞ்சொற்கேட்பர்மடிபுரிந்

தாண்டவுஞற்றிலவர். ... ... ... 7.

தடிமய்குடிமய்க்கட்டங்கிற்றன்ஞென்ஞர்
பொடிமய்புகுத்திவிடும். ... ... ... 8.

குடியாண்மயுள்வந்தகுற்றமொருவன்
மடியாண்மய்மாற்றக்கெடும். ... ... 9.

ஆஅயுஞல்மன்னவனெய்துமடியளந்தாங்
கேளயதெல்லாமொருங்கு. ... ... ... 10.

[180]

## நாடாளரது நிலைத்தற்றன்மய். (86)

சிதறியவிடத்தும் (ஏணினின்றுங்) குறய்வுபடாத (நாடாளரது) விளக்கமானது சோம்பலென்னுங் குற்றம்படரமழுக்குமுற்றுக் கெட்டுவிடும். ... ... ... 1.

(உள்ளத்துச்) சோம்பலைப் மடிதலாகச்செய்து(தம்வினய் வழுவாது) நடத்தல்வேண்டும் கூடிவாழ்தலய்வறுமயானது நீங்கவேண்டும் நாடாளர். ... ... ... ... 2.

(தன்னய்ப்) பிடித்தசோம்பலயே (இயல்பாக்) கொண்டு நடக்கு(முயல்)அறிவில்லா நாடாளன்பிறந்த(குடித்)தலய்மயானது மடிந்துபோகுந்தன்னிடத்தினு முன்பு. ... 3.

மாட்சிமையைக் கெடுக்கின்ற குற்றமானது பெருகிவரும் சோம்பலை மடித்து (தத்தமில்) ஆட்சி கொண்ட(ஏனைல்) முயல்வு செய்தலில்லாத நாடாளருக்கு. ... ... 4.

(எவற்றினும்) வடுக்காணும் நீர்மையும் மறதியும் சோம்பலும் தூக்கமுமாகியநான்கும் (நகுதற்றன்மையைக்) கடியுமியல்புள்ள நாடாளர் விரும்புமணிகளாம். ... ... 5.

மாட்சிமையுடையாரது தொடர்பு அமைந்த விடத்துஞ் சோம்பலுடைய நாடாளர் (நகுதல்) நிலைபெற்றபயனைப் பெறும்படி கிடைத்தலரிதாம். ... ... ... 6.

(தமக்கியல்பாயுள்ள) மாட்சிமையும் வேறுபட்டு (பிறரால்) இகழுஞ் சொல்லைக் கேட்பார் சோம்பல்செய்து ஆண்ட (அமைவால்) முயலுதலில்லாத நாடாளர். ... ... 7.

சோம்பற்பண்பானது (நாடாளனமைவாக்) கூடிவாழ் தலின்கண்தங்குமிடத்துத் தன் பகைவருக்குச் சிறுமையாக்கி (அவர் சரணத்திற்) செலுத்திவிடும். ... ... 8.

(ஏனைற்) கூடிவாழ்தலையாட்சிசெய்யுமிடத்து உள்ளே உண்டான குற்றமானது ஒரு நாடாளன் சோம்பலினைட்சியைத் (தன்னில்) நீக்கவே கெட்டுவிடும். ... ... 9.

(ஏனைிற்குரிய வினைகளைப்) ஆய்ந்து முயறலில் நிலைத்த நாடாளனையடையும் (அவன்) அடிகளளாவிய அவ்விடங்களிற் பொருந்திய பொருளெல்லாமொன்றாக. ... 10.

அருமயுடய்த்தென்றசாவாமய்வேண்டு
முருகுமுயற்சிதரும். ... ... ... 1.

ஓர்ந்துவினய்கெடலோம்பல்வினய்க்குறய்
தீர்ந்தாரிற்றீர்ந்தன்றுலகு. ... ... ... 2.

தாளாண்மயென்னுந்தகய்மய்க்கட்டங்கிற்றே
தேளாண்மயென்னுஞ்செருக்கு. ... ... 3.

மீளாண்மயில்லாதான்வேளாண்மய்பேடிகய்
கேளாண்மய்போலக்கெடும். ... ... 4.

மென்பால்விழயான்வினய்விழய்வான்றன்கேளிர்
துன்பந்துடய்த்தூன்றுந்தூண். ... ... 5.

முன்மய்திருவினயாக்குமுயற்றின்மய்
புன்மய்புகுத்திவிடும். ... ... ... 6.

வாளுளான்மாமுகடியென்பமடியிலான்
றாளுவான்றாமரயினாள். ... ... ... 7.

ஆள்வினையார்க்கும்பழியன்றறிவறிந்
தேள்விடலின்மைப்பழி. ... ... ... 8.

மொய்பொருளாகாதெனினுமுயற்சிதன்
கொய்வினையாற்கூலிதரும். ... ... ... 9.

ஊழையுமுப்பக்கங்காண்பருலைவின்றி
யூழாய்ந்துஞற்றுபவர். ... ... ... 10.

[182]

ஏணினர் முயற்சியுடையராதல். (87)

(வினையிடத்துச்செய்தற்கு) அருமையுடையதென்று (இடயில்) இறப்பவிடாமல் விரும்புமெழுச்சியைய் (ஏணினருக்கு)முயல்வுப்பண்பே கொடுக்கும். ... ... ... ... 1.

(ஏணினர்) ஆராய்ந்து (தமது) வினையைக்கெடுத்துவிடுதலொழியக்கடவர் (ஏனெனில்) வினையைக்குறையில்விட்டவரினின்றும் நீங்கியது அப்பொழுதே உலகம். ... 2.

(ஏணினருக்கு) முயற்சியைய் ஆட்கொள்ளலென்னும் பெருமையினிடத்துத் தங்கினதேயாம் (தத்தமில்) தெளிந்த ஆட்சித்தன்மையென்னுங் களிப்பு. ... ... ... ... 3.

(ஒருவினய்க்கூறுபாடுவந்தாலும்) மீள்வும்(அதனய்)ஆளு தலில்லாத ஏணினன் விரும்புமாண்மயானது பேடியிடத் துக் கேளாளுந் தன்மய்போற் கெட்டுவிடும். ... 4.

(செய்தற்கு) இலேசான காரியங்களய் விரும்பானய் (அரிய) வினய்களய் விரும்புமேணினன் தனது கேண்மயரது துன்பங்களய் நீக்கி (அவரய்த்) தாங்குந் தூணுவான். 5.

(ஏணினருக்கு) மூதன்மயான முயல்வானது செல்வம் வருதற் கிடத்தயுண்டாக்கும் முயல்வின்மயானது புலவிதாகிய வறுமயய்ப் புகுதச்செய்துவிடும். ... ... 6.

(முயல்வாகிய) ஒளியின்கணுள்ள ஏணினன் பெருமய் பொருந்தியஉயர்வுடயானென்பது(பெறுவான்)சோம்பலில்லானய்வினயுடயான்றம்வீட்டிற்பாதியாள்புடயனுவான். 7.

ஆட்சிசெய்யும் வினயுடய்மயானது யாவர்க்கும் பழிப்பன்று (ஏணினருக்கு) அறியவேண்டுவதறிந்து (பிறர்) எள்ளும் வினய்களயொழிதலின்மயே பழிப்பாம். ... 8.

நெருங்கிய பொருள்களாலே முடிவுபெறு தென்னுமிடத்தும் முயல்வானது தன்னுடய ஆய்வுவினயால் (ஏணினருக்கு அதற்குரிய) கூலியய்க்கொடுக்கும். ... ... 9.

(தம்மய்வெல்லவல்ல) பகயயும் பிற்பக்கங்காண வல்லவராவார் உலய்வில்லாமல் (முயல்வாற்) செய்யவேண்டுவதயுராய்ந்து நடத்துமேணினர். ... ... ... 10.

[183]

நகலுடய்மய். (88)

நடுக்கண்வருங்கானகுகவதனய்

அடுத்தூர்வதக்தொப்பதில். ...

... 1.

எள்ளத்தனயவிடும்பயறிவுடையார்

உள்ளத்தினுள்ளக்கெடும். .. ...

... 2.

இடும்பய்க்கிடும்பய்படுப்பரிடும்பய்
படும்பய்படாஅதவர். ... ...
... 3.

எடுத்தவாயெல்லாம்பகடன்ஞனுற்ற

விடுக்கணிடுக்கட்படும். ... ...

... 4.

அடுக்கிவரினுமழிவிலானுற்ற
விடுக்கணிடுக்கட்படும்.

... ... ... 5.

ஆம்படர்க்கல்லற்படுபவோபெற்றேமென்
றேம்புதறேற்றுதவர். ...

... ... 6.

கய்யாமுடம்பிடும்பய்க்கென்றுகலக்கத்தய்
வெய்யதாக்கொள்ளாதாமேல்.

... ... 7.

இன்பம்விழயாணிடும்பயியல்பென்பான்
என்புமுறுதலிலன். ... ... ... ... 8.

துன்பத்துளின்பம்விழயாதான்றுன்பத்து
ளின்பமுறுதலிலன். ... ... ... 9.

இன்னுமயின்பமென்க்கொளினுகுந்தன்
தென்னார்விழயுஞ்சிறப்பு. ... ... ... 10.

[184]

## ஏணினர் நகுதலுடயராதல். (88)

(ஏணினர்) நடுங்கத்தக்க துன்பம்வருங்காலத்து மகிழ்வு செய்யக்கடவர் அத்துன்பத்தய் நெருக்கிக் கீழ்ப்படுத்து வதில் (அந்த) அகநகுதலயொப்பது (பிறிது) இல்லய். 1.

(எவ்வளவு பெரிதாய்வந்தாலும்) எள்ளினளவான துன்பமாக அறிவுடய ஏணினர் மனத்தின்கண் நினய்க்க (அது அவ்வளவுமின்றிக்) கெட்டுவிடும். ... ... ... 2.

(தம்மயடய்ந்த) துன்பத்துக்கே துன்பத்தய் உண்டாக்குவார் துன்பத்தாலுண்டாகும் வருத்தத்தய் (உள்ளத்துப்) படுதல் பெருத ஏணினர். ... ... ... ... 3.

(தனக்குரிய வினய்களய்) எடுத்தவிடங்களிலெல்லாம் மதயானயய் ஒத்த ஏணினயடய்ந்த துன்பமே துன்பப் படும். ... ... ... ... ... ... 4.

(ஒருகாலத்தே ஒன்றன்மேலொன்ருக) அடுத்தடுத்து வந்தாலும் (அத்துன்பத்தால்) அழிவுருத ஏணினைய் அடய்ந்த துன்பமே துன்பப்படும். ... ... ... ... 5.

(வினேயிழந்தகாலத்து) உண்டாகுந் துன்பத்திற்கு (மனம்) வருந்துவனவோ (அவ்வினய் கிடய்த்தகாலத்துப்) பெற்ருேமென்று பெருமிதந் தெரியாத ஏணினர். ... ... 6.

(எப்பொழுதும் வசிக்கும்) இடமாம் உடம்பானது துன்பத்துக்கென்று துன்பத்தய் வெவ்வியதாககொள்ளாதாம் மேம்பாடுடய ஏணினர் (மனம்). ... ... ... 7.

இன்பத்தய் (என்றும்) விரும்பாதவனுய்த் (துன்பத்தய் யாவர்க்கும்) இயற்கயென்னுமேணினன் (தன்) ஏலும்பிலும் (பற்றுப்) பொருந்தலிலனுவான். ... ... 8.

துன்பம் வந்தவிடத்து அதனுள் (நகுதலால்) இன்பத்தய் விரும்பாத ஏணினன் (வினய்த்) துன்பத்தினுள் இன்பமனுபவித்தல் இலனுவான். ... ... ... ... 9.

(ஏணினன் வினயால்வரும்) துன்பத்தயே இன்பமென்னும்படி கொள்ளுமிடத்தில் உண்டாகுந் தன்னுடய பகய்வரும் விரும்பத்தக்க சிறப்பு. ... ... ... 10.

[185]

அமய்வுடய்மய். (89)

கருவியுங்காலமுஞ்செய்கயுஞ்செய்யும்

அருவினயுமாண்டதமய்ச்சு. ... ... 1.

கய்ந்தாள்குடிகாத்தல்கற்றறிதலாள்வினயோ
டய்ந்துடன்மாண்டதமய்ச்சு. ... ... 2.

பிரித்தலும்பேணிக்கொளலும்பிரிந்தார்
வருத்தலும்வல்லதமய்ச்சு. ... ... 3.

ஒல்லலுந்தேர்ந்துசெயலுமொருதலயா
மல்லலும்வல்லதமய்ச்சு. ... ... ... 4.

அறனறிந்தான்றமய்ந்தசொல்லானெஞ்ஞான்றுந்
திறனறிந்தான்றேர்ச்சித்துணய். ... ... 5.

ஆவுளநூலோடுடயார்க்கதிநுட்ப
மூவுளமுன்னிற்பவய். ... ... ... 6.

உயற்கயறிந்தக்கடய்த்துமுலகச்
செயற்கயறிந்துசெயல். ... ... 7.

உழயுற்றறியானெனினுமுறுதி
குழீயிருந்தான்கூறல்கடன். ... ... 8.

பழுதெண்ணுமந்திரியிற்பக்கத்துத்தெவ்வோ
ரெழுபது கோடியுறும். ... ... ... 9.

முறைப்படச்சூழ்ந்து முடிவிலவே செய்வ
ரிறைப்பாடிலாதவர். ... ... ... 10.

[186]

ஏணினர் அமைவுடைய ராதல். (89)

(ஏணினருக்குத் துணைக்) கருவியும் (ஏற்ற) காலமும் செய்யுமிடமும் செய்கின்ற அரியவினையுமாகிய இவைகளை ஆண்ட தன்மையே அமைவாம். ... ... ... 1.

(ஏணினருக்கு) இடத்தகலாத முயற்சியும் கூடிநிற்றலுங் காத்தலும் கற்றறிதலும் ஆள்வினையாற்றலுமான அய்ந் துடனும் மாண்புற்றதன்மையே அமைவாம். ... ... 2.

(வினையால் வேறுபட்டாரைப்) பிரித்துவிடுதலும் (வேறுபடாரைப்) பேணிக்கொள்ளலும் (ஆற்றலால்) பிரிந்தாரை வருவித்தலும் வல்லதே (ஏணினருக்கு) அமைவாம். 3.

(தமர்களோடு) பொருந்தலும் (பயன்படுமாறு) தேர்வுற்றுச்செய்தலும் ஒருதலையாக வளம்படுத்தலுமாகியவல்ல தன்மையே (ஏணினருக்கு) அமைவாம். ... ... 4.

அறஞ்செய்தலையறிந்து (பயன்) விரிந்து அமைவுபெற்ற சொல்லுடையனாய் எக்காலத்தும் தன்மைச்செயலறிந்தஏணினனே (பயன்) தேருதற்குத் துணையாம். ... ... 5.

(அமைவு) உண்டாகின்ற உள்ளம் ஆராய்வோருடைய ஏணினருக்குச் செய்தற்கரிய நுட்பவினைகள் இன்மையே உள்ளனவாம் முன்னிற்பனவாக. ... ... ... 6.

(ஏணினர் அவ்வவ்விடங்களிற்) செலுத்திச் செய்வனவற்றையறிந்தவிடத்தும் உலகத்தினது செயலியற்கையறிந்து (அமைவிற்) செய்தல்வேண்டும். ... ... ... 7.

(ஒருவன்றன்) இடத்தைப்பொருந்தி (அமைவு) அறியானென்னுமிடத்தும் (அதற்கு வேண்டும்)உறுதியைக் கூடியிருந்த ஏணினன் கூறுதல் கடனாம். ... ... 8.

(ஏணினர் தமராயினோருக்குப்) பழுதுனைக்கு மந்திரியிடம் (இருப்பதிலும்) அயலிடத்திருக்கும் பகைவர் தம்மிடத்துடைமையாவது கோடிபங்கு நலமாம். ... ... 9.

முறைமையுண்டாக ஆலோசித்தும் முடிவு இல்லாத வினைக்களையே செய்வார் இறைமைக்குரிய (அமைவுப்) பெருமையில்லாத ஏணினர். ... ... ... ... ... 10.

